


# தரத்தை மதிப்பீராயின், தரும் விலைக்குத் தக்க மதிப்பைத் தருவது ரெக்ஸ்!

எங்கள் ஸ்க்வாஷ்கள், நேர்த்தியிலும் நேர்த்தியானவையாகப் பார்த்துப் பார்த்துப் பறித்த பழங்களிலிருந்து தயாரிக்கப்பட்டவை. பிறகு, தெள்ளிய தூய சீனிப் பாகும் வேறு பல விசேஷச் சரக்குகளும் சேர்க்கப்-பட்டவை. எனவே, சுவைத்தறியாப் புத்துணர்ச்சி தரும் பானமாக உங்களை அடைகிறது ரெக்ஸ்.




கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்,  பம்பாய்-1.

*Bensons/1966A-TM*



# கல்கி பொருளடக்கம்

கீலக சித்திரை 23 — மே 5



"கல்கி"யில் வெளியாகும் கதைகளிலுள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



(படவிளக்கம் 15-ம் பக்கம் பார்க்க)


இந்தியா
அணு ஆயுதங்கள்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 □ இதழ் 40



# தொழில் துறையில் அரசியல் வேண்டாம்!

செய்ய முடியாதவை என்று அடியிற் கண்டவற்றைக் குறிப்பிடுகிறார் ஆபிரஹாம் லிங்கன் :

சிக்கனத்துக்கு ஊக்கமளிக்காமல் சுபிட்சத்தை உண்டாக்க முடியாது.

பெரியோர்களை நாசமடையச் செய்வதால் சிறிய மனிதர்களுக்கு நன்மை செய்ய முடியாது.

பலமுள்ளவர்களின் சக்தியைக் குறைப்பதால் பலவீனர்களுக்குச் சக்தியூட்ட முடியாது.

ஊதியம் கொடுப்பவரைக் கீழ் நிலைக்கு இழுப்பதால் ஊதியம் பெறுபவரை மேல் நிலைக்குக் கொண்டு செல்ல முடியாது.

பணக்காரர்களை அழிப்பதால், ஏழைகளுக்கு நன்மை புரிய முடியாது.

வருவாயைவிட அதிகமாகச் செலவழிப்பதால் சங்கடத்தைத் தவிர்க்க முடியாது.

வகுப்புத் துவேஷத்தைத் தூண்டுவதால் மனிதனின் சகோதரத்துவத்துக்கு உதவ முடியாது.

கடன் வாங்கிய பணத்தைக் கொண்டு பாதுகாப்பு பெற முடியாது.

மனிதனின் ஊக்கத்தையும் சுதந்திரத்தையும் பறித்துவிட்டு நன்னடத்தையையும் திரத்தையும் உண்டாக்க முடியாது.

மக்கள் தாமாகவே செய்து கொள்ள முடிகிற — தாமாகவே செய்து கொள்ள வேண்டிய — காரியங்களை அவர்களுக்காக நீண்ட கால அடிப்படையில் செய்வதால் உண்மையில் அவர்களுக்கு உதவி புரிய முடியாது.

நூறாண்டுகளுக்கு முன்னால் லிங்கன் கூறியவை இன்றும் அழுத்தமான உண்மைகளாக உள்ளன. லிங்கன் அன்றைய அமெரிக்காவைக் குறித்துச் சொன்ன இந்த உண்மைகள் இன்றைய இந்தியாவுக்கு அப்படியே பொருந்துகின்றன.

இவற்றில் ஒன்று, 'ஊதியம் கொடுப்பவர்களைக் கீழ்நிலைக்கு இழுப்பதால் ஊதியம் பெறுபவரை மேல் நிலைக்குக் கொண்டு செல்ல முடியாது' என்பதாகும்.

இது மிக மிக எளிய உண்மை. எனினும், இவ்விஷயத்தில் மிக நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள் இதனை அறிய முடியாதபடி ஒரு சிக்கலான அமைப்பு ஏற்பட்டு விட்டது. இதே போல் எளிய, தெளிவான இன்னோர் உண்மை, மக்கள் தங்களுக்கு லாபம் கிடைக்கும் என்கிற நோக்கத்தின்மீது தான் உற்சாகத்தோடும் திறமையோடும் உழைப்பார்கள் என்பது. இவ்விரு உண்மைகளுமே தேசிய அபிவிருத்தியின் வேர்களாகும்.

உற்பத்தி பெருகாமல் சுபிட்சம் பெற முடியாது. மற்ற நாடுகளிடமிருந்து கடன் வாங்கியே வளம் பெற முடியும் என்று பாரதம் நம்புவதற்கில்லை. உற்பத்தியில் லாபகரமாக ஈடுபடுத்துவதற்காக வெளிநாடுகளிலிருந்து ஒரு வரம்புக்குள் கடன் வாங்குவதில் தவறில்லை. ஆனால் இந்த வரம்பை நன்கு புரிந்து கொண்டு மீறாமல் இருக்க வேண்டும். வாங்கிய கடனை மிகுந்த ஜாக்கிரதையுடன் முதலீடு செய்து நிர்வகிக்க வேண்டும். இல்லாவிடில் நாம் உரிய அளவு லாபமெடுக்காத போதும், அல்லது லாபமே எடுக்காமல் நஷ்டப்படும் போதும், கடன்களுக்குச் செலுத்த வேண்டிய வட்டி மட்டும் உயர்ந்து வருவதைக் காண்போம்.

தேச வளர்ச்சிக்கு உற்பத்தி உயர்வு அத்தியாவசியம் என்பதை மனத்தில் கொண்டு முதலில் சொன்ன உண்மைகளின் முக்கியத்துவத்தை நன்கு உணர வேண்டும். ஊதியம் பெறும் சிப்பந்திகள் யாவரும் தொழிற்சங்கங்கள் அமைத்திருக்கின்றனர். பெரும்பாலும் இச்சங்கங்கள் அரசியல் கோஷ்டிகளால் இயக்கப்படுகின்றன. இச்சங்கங்களின் கொள்கைகளும் செயல்களும் இந்த அரசியல் கோஷ்டிகளாலேயே முடிவு செய்யப்படுகின்றன.

இந்தக் கோஷ்டியுடன் தமது செல்வாக்கையும் அதிகாரத்தையும் வலுப்படுத்திக் கொள்வதற்குத்தான் முதலிடம் தருகின்றனவே யன்றி, சிப்பந்திகளின் நலனுக்கு அல்ல. பேரம் பேசுவதாலும் வேலைநிறுத்தம் செய்வதாலும் உடனடியாகத் தங்களுடைய அரசியல் அதிகாரத்துக்கு வலுக் கிடைப்பதையும், தங்களுக்கு ஒரு ஜோதிப் பிரபை கிடைப்பதையுமே அரசியல் கோஷ்டிகள் பெரிதாக நினைக்கின்றன. இவ்வாறு தங்கள் செல்வாக்கை அதிகப்படுத்திக் கொள்வது தான் இவர்களின் குறிக்கோளேயன்றி உற்பத்தியை உயர்த்துவது அல்ல. பொருளாதார உண்மைகளை அனைவரும் அறியச் செய்வதற்கும், உற்பத்தியை உயர்த்துவதற்கும் இயலாத முறையில் ஒரு தடையாகவே இன்று தொழிற்சங்கங்களின் நிருவாகம் உருவாகி யிருக்கிறது. இந்நிலையில் எவற்றுக்கு உண்மையில் முதலிடம் கொடுக்க வேண்டும் என்பதை உணர்த்துவதற்கு வாய்ப்பில்லை.

அனைவருக்குமே வேலை வாய்ப்பு ஏற்படுத்தித் தர முடியாவிட்டாலும், வேலைவாய்ப்புகளை அதிகப்படுத்தியே ஆக வேண்டும் என்பது ஒரு தேசிய இலட்சியம். இதற்குத் தொழிலகங்களில் அதிகமான சிப்பந்திகளை வேலைக்கு எடுத்துக் கொள்ளத் தக்க சூழ்நிலை ஏற்பட வேண்டும். தொழிலகங்கள் அளவிலும் எண்ணிக்கையிலும் பெருகினால்தான் புது வேலைகளுக்கு இடமுண்டு. முதலீட்டாளர்களுக்கு லாபகரமாக இருந்தால்தான் இதற்கேற்பத் தொழில்துறை விரிவு பெறும். இந்த உண்மையைப் புறக்கணித்துச் சர்க்காரை உதவிக்கு எதிர்பார்ப்பதால் ஏற்பட்டுள்ள விளைவுகளை அநுபவித்து வருகிறோம். இயல்பான முறையில் தொழில் அபிவிருத்தி ஏற்பட்டு, அதன் மூலம் வேலை வாய்ப்புக்கள் பெருகாமல், சர்க்கார் நிறுவனங்களின் மூலம் வேலையின்மையைத் தீர்க்க முயல்வதன் பலனைப் பார்த்து வருகிறோம். எல்லா விதத்திலும் வரிகள் உயர்ந்திருப்பதும், அப்படியும் பட்ஜெட்டில் துண்டு விழுவதும், ரூபாய் நோட்டுப் பெருக்கமும், விலை உயர்வுமே இதன் விளைவுகள்.

சர்க்கார் தொழிலகங்களின் நிருவாகத்தைக் கவனிக்கும்போது, தொழில் துறை அநுபவஸ்தர்களுக்குப் பதிலாக அரசாங்க அதிகாரிகள் நிருவாகம் செய்வதைக் காண்கிறோம். நிருபணமே தேவையில்லாத அடிப்படை உண்மைகளும் இந்த நிர்வாகிகளால் கவனிக்கப்படாமல் இருப்பதைக் காண்கிறோம். நிர்வாகிகளுக்குத் தங்கள் வேலை இன்னது என்று தெரிந்திருக்க வேண்டும். தமது மேலிடத்தாரிடமிருந்து நல்ல பெயர் எடுக்க வேண்டும் என்பதைவிட நிறுவனத்தை நல்ல முறையில் நிர்வகிப்பதில் அவர்கள் அக்கறை காட்ட வேண்டும். கொள்கைகளை வகுப்பதில் அவர்கள் சுதந்திரம் பெற்றிருக்க வேண்டும். உற்பத்தியில் அக்கறையின்றி, சொந்த அரசியல் முன்னேற்றத்தையே கருதுவோர் தங்களது வேலையில் குறுக்கிடுவதற்கு நிர்வாகிகள் இடம் தரக்கூடாது. சர்க்கார் துறை தொழில்களின் நாசத்துக்கு முக்கிய காரணம், அதிகார வர்க்கத்தால் உருவான நிர்வாகத்தினர் அரசியல் நோக்கமுள்ள மந்திரிகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதுதான். கடந்த பல ஆண்டுகளாக அரசாங்கத் தொழிலகங்களில் தப்பாமல் ஏற்பட்டு வரும் நஷ்டங்களிலிருந்து யாருமே படிப்பினை பெற முடியும். கொள்கைப் பிடிவாதம் என்பது பகுத்தறிவு நிலவ முடியாதபடி அமுக்கி நெரிக்கிறது.

('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது.)

---

**காமகோடியின் கருணைமொழி** **(ஸ்ரீ சங்கர ஜயந்தி: 2-5-68)**

சம்புவாகக் கைலாசத்தில் அமர்ந்திருக்கும் பரமேசுவரனின் நடக்கின்ற மூர்த்தியே ஸ்ரீ சங்கராசாரியர்கள். 'சம்' என்றால் 'நித்யானந்தம்' என்று அர்த்தம். 'பூ' என்றால், 'உற்பத்தியாகும் இடம்'. நித்யானந்தத்தின் உற்பத்தி ஸ்தானமாக இருக்கிறார் சம்பு. ஓர் ஊற்று உற்பத்தியாகிறது என்றால் ஜலம் வேண்டியவர்கள் அந்த ஊற்று இருக்குமிடத்துக்குத் தாங்களே போய்த்தான் எடுத்துக் கொள்ள வேண்டும். இப்படியே பக்குவமான ஜீவன்கள் தம்மைத் தேடி வந்து நித்திய சுகம் அடையும்படி அமர்ந்திருப்பவர் சம்புவாகிய பரமசிவன்.



ஆனால் இந்தக் கலியுலகத்திலோ 'சம்பு' வாக இருந்தால் போதாது. நித்தியானந்த ஊற்றைத் தேடி வருபவர்கள் இந்த யுகத்தில் இருக்கமாட்டார்கள். எனவே, ஜனங்களைத் தேடிப் போய் நித்திய சுகத்தை அவர்களிடம் கையில் எடுத்துத் தருகிற ஒரு மூர்த்தி தேவைப்பட்டது. அதாவது 'சம்' என்கிற சுகத்தின் இருப்பிடமாக மட்டும் இல்லாமல் அந்த 'சம்'மைச் செய்கிற ஒரு மூர்த்தி வேண்டியிருந்தது. அப்படி 'சம்'மைச் செய்கிறவர் தான் சங்கரர். (சம் — நித்திய சுகம்; கரர்—செய்கிறவர்) உட்கார்ந்த சம்புமூர்த்தியே நாடு முழுவதையும் சுற்றுகிற சங்கராசாரிய மூர்த்தியாக வந்தார். ஸ்ரீ சங்கர ஜயந்தி மகோத்சவத்தில் முக்கியமான அம்சம், ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதரின் திருவாக்கிலிருந்து வெளிவந்த ஸ்தோத்திரங்களில் ஒன்றையாவது நமது வாயினால் சொல்லி அவரது திருவடிகளில் சமர்ப்பணம் செய்வதேயாகும்.

# என்ன சேதி?

## மகாவித்துவான் மறைவு

ஹிந்துஸ்தானிசங்கீத உலகில்மகோன்னதமாக விளங்கிய படே குலாம் அலிகான் அவர்களின் மரணச் செய்தி கேட்டுத் தமது உறவினர் ஒருவரை இழந்த துயரத்தை அடைந்த இசை ரசிகர்கள் அனந்தம். உயர்ந்த கலை எங்கு தோன்றினாலும் அதைப் பாராட்டிப் பரவசமாகும் தமிழகத்தை நாத பாசம் வீசித் தம் வசமாக்கிக் கொண்டிருந்த மகா வித்துவான் மறைந்து விட்டார்.



படே குலாம் அலிகான்

பாட்டியாலா காயகி என்ற புகழ் வாய்ந்த சங்கீத பத்ததியின் கீழ்க் கன்றாக ஐந்தாம் பிராயத்திலேயே துளிர்த்த படேகுலாம் அவர்கள் காலக்கிரமத்தில் கப்பும் கிளையும் கொண்ட நெடுந் தருவாக வளர்ந்து ரசிகர்களின் இதயங்களில் குளிர்ந்த நிழல் வீசினார். இணையற்ற சாரீர சம்பத்தும், பொங்குகின்ற உணர்ச்சியும், தெளிவான உச்சாரணமும் அவரது இசையின் விசேஷ அம்சங்கள். சங்கீதத்தால் மத பேதங்களைக் கடந்தவர் அவர். ஒருமுறை அவர் சென்னைக்கு விஜயம் செய்திருந்தபோது ஒரு கச்சேரியில் 'ஹரி ஓம் தத்ஸத்' என்பதனை உளம் குவிந்து இசைத்த போது அதில் சொக்கிய ராஜாஜி, பாடல் முடிந்தவுடனே மேடைக்குச் சென்று அவரை வாழ்த்தினார். அவரது உணர்வின் உயர்வால் கேட்போரும் மொழி பேதத்தைக் கடந்து அவரது இசையை அநுபவிக்க முடிந்தது. சாகித்தியத்தின் சொற்களைப் புரிந்து கொள்ள முடியாதவர்களும்கூட அவரது நாதத்தின் போக்கினாலேயே அப்பாடல்கள் கட்டும் மாலையையும், மந்தமாருதத்தையும், மகாநதிகளையும், தேவமந்திரங்களையும் தரிசிக்க முடிந்தது.

உடலால் 'படே'யாக விளங்கியவர்; உள்ளப் பாங்கினால் 'படே'யாக விளங்கியவர்; இசையால் 'படே'யாக விளங்கியவர். நீண்ட காலம் நோய்வாய்ப்பட்டிருந்து கந்தருவ லோகம் சேர்ந்து விட்டார். அவரது கயாலும், தும்ரியும், கஜலும், பஜன்களும் ரசிகர்களின் நெஞ்சில் சிரஞ்சீவியாக மணம் கமழ்ந்து கொண்டிருக்கும்.

## காமராஜின் கோபம்

சென்னை மதுவிலக்கு மகாநாட்டைத் தொடங்கி வைத்த தமிழக முதன் மந்திரி திரு அண்ணாதுரை, மதுவிலக்கு விஷயம் கட்சிகளுக்கு அப்பாற்பட்ட எல்லாக் கட்சியாரும் வரவேற்கிற நல்ல திட்டம் என்று யாரையும் குறை கூறாமல், அதற்கு மாறாக எல்லாரையும் பாராட்டி மிக உயர்தரமாக உரையாற்றினார். பின்னால் பேசிய காமராஜ் ஏனோ ஆத்திரமடைந்து, ''தமிழகத்திலுள்ள காங்கிரஸ் அல்லாத தி. மு. க. மதுவிலக்குத் திட்டத்தைத் தொடர்ந்து அமுல் படுத்த உறுதி பூண்டிருக்கிறது. அதற்குக் காரணம் தமிழக மக்களே தவிர தி. மு. க. அரசாங்கமல்ல! அரசாங்கத்தைப் பாராட்டுவதற்கு ஒன்றுமில்லை. மக்களைத்தான் பாராட்ட வேண்டும்!'' என்று பேசினார்.

அகில இந்திய காங்கிரஸ் கட்சியின் தலைவராக இருப்பவர், 'தமிழக மக்கள்தான் மதுவிலக்குக் கோருகிறார்கள், மைசூர், ஆந்திரம், மத்திய பிரதேசம் போன்ற இந்தியாவின் மற்ற பகுதிகளிலுள்ள மக்கள் கோரவில்லை' என்று சொல்வதுபோல் படுகிறது. இது உண்மைக்குப் புறம்பான விஷயம் அல்லவா?

ஆனாலும் ஓர் உண்மையை அவர் கூற்றிலிருந்து வெளிப்படுத்தி விட்டார். தமிழகத்தில்தான் மக்கள் எதை விரும்புகிறார்களோ, அதைக் கொடுக்கும், செய்யும் அரசாங்கம் இருக்கிறது என்று சொல்லி விட்டார்!

## மேல் சபைக்கு ஷண்முகம்

நண்பர் அவ்வை டி. கே. சண்முகம் அவர்கள் சென்னை மேல்சபைக்குச் சர்க்காரால் நியமனம் செய்யப்பட்டிருக்கிறார் என்ற செய்தி கேட்டுத் தமிழக மக்கள் பெரு மகிழ்ச்சி அடைவார்கள். தமிழ் நாடகக் கலையைச் சீரிய நிலைக்குக் கொண்டு வந்து கலையுடன் தமிழையும் இசையையும் வளர்த்த பெருமை திரு டி. கே. ஷண்முகத்துக்கே உண்டு. கலைத் துறையின் காவலராகச் சென்னை மேல் சபையில் பணியாற்றுவார். சமீபத்தில் அவர் இதய நோயுற்றுத் தேறி வருகிறார் என்று கேள்வியுற்றோம். தமிழக அரசு அளித்த இக் கௌரவமும் அவருக்குச் சிறந்த ஔஷதமாகப் பயன்படும் என்று நம்புகிறோம்.



திரு டி. கே. ஷண்முகம்

# ராஜாஜியின் கருத்துக்கள்

நூறு ஏக்கர் பரப்பில் பச்சைக் காய்கறிகள் பயிர் செய்து மக்களுக்கு விற்பதற்காகத் தமிழக அரசாங்கம் திட்டம் போட்டிருப்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. இப்போது ஒருவரோடு ஒருவர் போட்டியிட்டுக் காய்கறித் தோட்டம் போட்டு, விற்பனை செய்து வரும் தனியார்கள் இத்தொழிலை நல்ல முறையிலேயே செய்து வருகிறார்கள். மற்ற சர்க்கார் தொழில்கள் யாவும் தோல்வி கண்டதைப் பார்க்கிறோம். இதற்கு மாறாகச் சர்க்காரின் கறிகாய்த் தோட்டத் திட்டம் வெற்றி பெறும் என்று எண்ண இடமில்லை. நல்ல காய்கறிகளைப் பயிர் செய்து, பூச்சிகளிடமிருந்தும் பட்சிகளிடமிருந்தும் காப்பாற்றி, அவை அழுகிப் போவதற்குமுன் விரைவில் விற்பனை செய்வது எளிதான காரியம் அல்ல. இதுவரையில் சர்க்கார் ஈடுபட்ட 'கேபின்' உற்பத்தி முதலியவற்றை விட இது கடினம். மிகுந்த கண்காணிப்புடன் லாப — நஷ்டங்களை நுணுகி ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டியது கறிகாய்த் தோட்டத் தொழில். 'விவசாயம் என்பது இடர்ப்பாடுகள் மலிந்த தொழில்; நஷ்ட வாய்ப்புக்கள் மிகவும் அதிகமாயுள்ள தொழில்; எல்லாத் தொழில்களிலும் மிகக் குறைந்த லாபம் தருகிற தொழில். விவசாயி வெற்றிகரமாகத் தொழில் நடத்த மற்ற எந்தத் தொழிலையும்விடப் பத்து மடங்கு அதிக உழைப்பும், உஷாரும், கவனிப்பும், திறமையும், நல்லதிருஷ்டமும் தேவை' என்று அறிஞர் பர்க் கூறினார். எளிய விவசாயிகளின் தொழிலில் சர்க்கார் பிரவேசிக்கும்போது, இயந்திரங்களிலும், ரசாயன உரங்களிலும் ஏராளமாகச் செலவழிப்பார்கள். தொழில்துறை சகாக்களின் போட்டிக்கும், இயற்கையால் ஏற்படக்கூடிய வெய்யில், மழை முதலிய இன்னல்களுக்கும், மிருகங்களாலும் பூச்சிகளாலும் உண்டாகக்கூடிய உபத்திரவங்களுக்கும் ஈடுகொடுக்குத் தனி மனிதர்கள் கண்டுள்ள நல்ல விளைவுக்கு மாறாகவே சர்க்காரின் விவசாய நிர்வாகம் அமையும். தற்போது தமிழக அரசாங்க பஸ் போக்குவரத்தின் நஷ்டங்களை ஆராய்வதற்காகக் கமிட்டி அமைத்திருப்பது போல் எதிர்காலத்தில் இன்னொரு கமிட்டி அமைப்பதற்கே சர்க்காரின் காய்கறித் தோட்ட உத்தேசம் வழி வகுக்கும் என்று அஞ்சுகிறேன். இத்திட்டத்தைச் செயலாக்கும் சபலத்தைத் தமிழக அரசாங்கம் தவிர்த்தால் நலமாக இருக்கும். நல்ல நிர்வாகத்தைத் தருவதன் மூலமே தமிழக அரசாங்கம் பொதுஜன ஆதரவைப் பெற வேண்டும். மந்திரிகளும் அதிகாரிகளும் அறியவொண்ணாத பல சிரமங்கள் மலிந்துள்ள புதுத் துறைகளில் பரீட்சை செய்து பார்த்து அரசாங்கம் மக்கள் ஆதரவைப் பெற முயல வேண்டியதில்லை.

***

நான்கு மாதங்களுக்கு முன்பு பிரிட்டனிலிருந்து வந்த ஒரு செய்தி :

பொருளாதாரக் குழப்பத்துக்கு ஆளாகியுள்ள பிரிட்டனை ஆபத்து நிலையிலிருந்து வெளியேற்றுவதற்காக ஓர் இணையற்ற வழி கடைப்பிடிக்கப்படுகிறது. இவ்வழி வேகமாகப் பலரிடையே பரவி வருகிறது. சிப்பந்திகள் சம்பளமில்லாமலே கூடுதலாக அரைமணி வேலை செய்வதுதான் இவ்வழி.

இந்த முப்பது நிமிட இலவச உழைப்பினால், தொழிலகத்தின் உற்பத்திச் செலவு உயராமலே பிரிட்டன் ஏற்றுமதி செய்யக் கூடிய பண்டங்கள் அதிகரிக்கும் என்ற கருத்தின் மீது இந்தத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

முதலில் லண்டன்புற நகரிலுள்ள ஓர் ஏற்றுமதித் தொழிலகத்தில் ஐந்து தட்டெழுத்தாளர்கள் இவ்விதம் ஊதிய

---

அட்டைப்பட விளக்கம்

## கள்ளம் புகுந்த உள்ளம்

கையில் குடத்துடன் தண்ணீர் எடுக்க வந்த காரிகை தான் வந்த காரியம் முடிந்த பின்னரும் ஏன் குடத்தை வெளியே எடுக்காமல் குனிந்தவண்ணமே நிற்கிறாள்? ஒரு வேளை ஏதாவது சினிமாப் படத்துக்குப் போஸ் கொடுக்கிறாளோ? அப்படியென்றால் இடுப்பில் வைத்த குடத்தை லாகவமாகத் தழுவிய கையுடன் கவர்ச்சியாக அல்லவா 'போஸ்' கொடுத்திருப்பாள்?

உண்மையில் அவள் வந்த காரியம் இன்னும் முடியவில்லை. அவள் வெற்றுக் குடத்துடனும், உள்ளத்தில் நிரம்பி வழியும் ஆசையுடனும் வந்தாள். ஆனால் அவள் உள்ளத்தில் இடம் கொண்ட அவன் இன்னும் வரவில்லை. உள்ளம் அலை பாய்ந்தது. குடம் எப்பொழுதோ நிரம்பிவிட்டது. ஆனால் உள்ளம் நிறையவில்லை.

கதிரவனைக் கண்டால்தான் தாமரை மலரும். காதலனைக் கண்டால்தான் காதலியின் உள்ளம் நிறைவெய்தும்.

காதலியின் இந்த உள்ளப்பாங்கை உள்ளபடி அறிய வேண்டுமானால் கவிஞரைத்தான் நாடவேண்டும். ஒருவர் உள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டும் ஆற்றல் அவர்களுக்குத் தானே உண்டு!

"உள்ள நிறைவினில்
கள்ளம் புகுந்திடில்
உள்ளம் நிறைவாமோ?"

என்ற பாரதியின் கவிதை காதல் கொண்ட உள்ளத்தின் நிலையை எவ்வளவு அழகாக விளக்குகிறது!

அதோ அவன் வந்துவிட்டான்; அவள் முகம் மலர்கிறது! இனி நமக்கு அங்கு என்ன வேலை?

புகைப்படம்: வித்யாஸ்ரதா

என் கண்களில் வளர்ந்துள்ள பார்வைக் குறைவாலும் வயதின் காரணமாய் ஏற்பட்டுள்ள பலவீனத்தினாலும் வரும் கடிதங்களைப் படித்துப் பதில் எழுத இயலாமலிருக்கிறேன். பழைய பக்தர்களும் புதிதாக நட்பு நாடும் நண்பர்களும் எனக்குக் கடிதங்கள் எழுதி விடை எதிர்பார்க்காமலிருக்க வேண்டும் என்று வருத்தத்துடனும் வணக்கத்துடனும் இந்த எச்சரிக்கைக் குறிப்பைக் கல்கியில் எழுதுகிறேன்.

சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

மின்றி அரைமணி அதிக உழைப்புத் தந்தனர். இது வெகு விரைவில் பரவித் தொழிற்சாலையிலுள்ள 240 ஊழியர்கள் இதே போல் செய்தனர்.

பிறகு வேறு பத்துத் தொழிலகங்களும் தமது ஊழியர்கள் இவ்வியக்கத்தில் சேருவதாகத் தெரிவித்தன.

❖❖❖

ஆணும் பெண்ணும் சேர்ந்து பயிலும் கூட்டுக் கல்வி, சினிமாக்கள், கவர்ச்சிப் படங்கள், செய்திப் பத்திரிகைகளில் முழுப் பக்கத்தையும் அடைத்துக் கொண்டு படத்துடன் வெளியாகும் சினிமா விமரிசனங்கள், இவற்றோடு இந்திய சர்க்கார் ஏராளமான பணம் செலவழித்தே தீருவது என்ற சங்கற்பத்துடன் மேற்கொண்டுள்ள 'லூப்' முதலிய கருத்தடைத் திட்டங்களும் சேர்ந்து நம் இளைஞர்களின் நன்னெறிகளை நிச்சயம் நாசம் செய்யப் போகின்றன. உணவு உற்பத்திக்குச் சமனாக ஜனப்பெருக்கத்தைச் செய்ய வேண்டும் என்கிற கருத்தில் கருத்தடைத் திட்டம் போடப்பட்டுள்ளது. ஆனால் இந்த லட்சியத்தை அடைவதற்கு மிகவும் முன்பாகவே இளைஞர்களின் தரும உணர்ச்சி பாழாகப் போகிறது.

❖❖❖

தமிழக முதன்மந்திரியிடம் அமெரிக்காவின் நல்ல மக்கள் மிகுந்த கௌரவமும் நட்பும் காட்டியிருப்பது செய்திகளிலிருந்து தெரிகிறது. முதன் மந்திரிக்கு மிகச் சிறந்த முறையில் உபசரிப்புத் தந்திருக்கிறார்கள். காங்கிரஸின் 'ஜோதி கோஷ்டி'யில் இல்லாத ஒருவர் — காங்கிரஸைத் தளர்ச்சியில்லாமல் எதிர்த்து, இந்தியாவின் மிக முக்கியமான ராஜ்யங்களில் ஒன்றில் ஆட்சிக் கடிவாளத்தைக் கைப்பற்றியுள்ள ஒருவர் — அமெரிக்க மக்களை இவ்வளவு கவர்ந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இதுவரை அமெரிக்காவுக்கு விஜயம் செய்த காங்கிரஸ் தலைவர்களையே அம் மக்கள் கண்டு வந்திருக்கின்றனர்.

அமெரிக்காவில் திரு அண்ணாதுரை அவர்கள் மற்றவர்களுக்கு ஒரு முன்மாதிரியாக விளங்கும் விதத்தில் சீரிய முறையில் நடந்து கொண்டிருக்கிறார். நட்புக் கொண்டுள்ள வெளிநாடுகளுக்குப் பிரமுகர்கள் செல்கையில் பின்பற்ற வேண்டிய மிகவும் உத்தமமான முறையை திரு அண்ணாதுரை பின்பற்றி வருகிறார்.

திரு அண்ணாதுரையின் விஜயத்தால் தமிழ் நாட்டுக்கும் யேலுக்குமிடையே ஒரு புது உறவு ஏற்பட்டுள்ளது. சுமார் மூன்று நூற்றாண்டுகளுக்குமுன்பு சென்னை கவர்னராயிருந்த எலிஹு யேல் கொடுத்த நன்கொடையால் அமெரிக்காவில் நியூஹாவனிலிருந்த யேல் பள்ளியானது கல்லூரியாக உயர்த்தப் பட்டது.

எனவே, யேல் சர்வகலாசாலை தமிழகத்தின் வளர்ப்புக் குழந்தை என்று நாம் பெருமை கொண்டாடலாம்.

❖❖❖

நம்முடைய அந்நியக் கடன்கள் ரூ. 4,633 கோடி. நம்முடைய மொத்தப் பொதுக் கடன் ரூ. 13,000 கோடிக்கும் அதிகம். இன்னமும் சர்க்காரின் செலவு உயர்ந்து கொண்டிருக்கிறதே ஒழிய, குறையவில்லை. இதனால் சகிக்க முடியாத நாசகர வரிகள் விதிக்கப்படுகின்றன. விலைவாசிகள் ஏறுகின்றன.

நமது தேசியப் பொருளாதாரம் இப்படிப்பட்ட சிக்கலில் மாட்டிக் கொண்டிருக்கும் போது இதைத் தீர்க்கக்கூடிய வைத்திய விற்பன்னர்களையும் ரணசிகிச்சை நிபுணர்களையும் உதவிக்கு அழைப்பதே முறை. இச்சமயத்தில் தில்லியிலுள்ள ஆளும் கட்சியினர் ஐக்கிய முன்னணி அரசாங்கங்கள் கவிழ்ந்துவிட்டதில் கொக்கரிப்பதாலோ தங்கள் பெருமையை முழங்கிக்கொள்வதாலோ பிரச்னை தீர்ந்துவிடாது. எதிர்க் கட்சி அரசாங்கங்களுக்கு எதிராகக் காங்கிரஸ் கட்சி தன் அதிகாரத்தை வெற்றிகரமாகச் செலுத்துவது அரசியல் தந்திரமேயன்றி, பொருளாதாரப் பிரச்னையில் உதவாது.

கட்சிப் பற்றற்ற நிபுணர்களை அழைத்து, அவர்களிடம் நாட்டின் நிருவாகப் பொறுப்பை ஒப்புவிக்கும் அளவுக்கு நிலைமை முற்றிவிடவில்லை என்று தில்லி ஆட்சி பீடத்தினர் சொல்கிறார்கள். என்றாலும் ஆபத்து வருகையில் அதை முன்கூட்டி எதிர்த்துச் சென்று அதன் முன்னுச்சிக் கேசங்களையே பிடித்து நிறுத்துவது சிலாக்கியம். ஆபத்து வந்தபின் பார்த்துக் கொள்ளலாம் என்று இருந்துவிட்டு, நிலைமை கைமீறிப் போகச் செய்வது மடமை. தேசத்தின் பொருளாதார நிலை கண்டு அரசியல் வாதிகள் விவேக ஒளி பெற வேண்டும்; தாங்களே அதிகாரத்தில் நீடித்திருக்க வேண்டும், அதிகாரப் பிரபையை ருசிக்க வேண்டும் என்ற ஆபத்தான பேராசையை விடவேண்டும்.










இது நாள் வரை நீங்கள்
கனவிலே கண்டு
நெஞ்சத்தைப்
பறிகொடுத்து வந்த
நறுமணப் பவுடரை
நனவாக்குகிறது,
புதுமுறையில் அமைந்த
கோயா, பனித்துளிக்கு
நிகரான இந்த பவுடர்
இந்த நாள் வரை
கண்டிராதபடி மைய
அரைக்கப்பட்டதும்
மிருதுவானதும் ஆகும்.

அது மட்டுமா? கோயா
நிபுணர்கள் இதில் புகுத்தி
யுள்ள பரிமளம் நாள் முழு
தும் நிலைத்து, புத்தம்புதிய
சுகந்தத்தைப் பரப்பிக்
கொண்டே இருக்கும்.

புதுமை மணம்
பொருந்திய 'பிளாக்
ரோஸ்' பூத்த புது
மலரின் வாசனை
வீசும் 'கார்டீனியா',
உள்ளத்தை அள்ளும்
'பாஸ்போர்ட்'—
நீங்கள் தேர்ந்தெடுக்க
இத்தனை நல்ல வாசனை
ரகங்களில் கோயா
கிடைக்கிறது. நெடு
நாள் நீடிக்கும் உயர
மான புதிய டின்னில்
மூன்றுமே வருகின்றன
என்பதை மறவாதீர்.



புதிய முறையில்
அமைத்த உயரமான
புதிய டின்னில் கிடைக்கும்
அருமையான பவுடர்

இந்த நறுமண
பவுடரைத்
தயாரிப்போர்

**கோயா**

பாரிஸ்
லண்டன்
நியூயார்க்



AGC-5 TH

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்)
லிமிடெட்
(இங்கிலாந்தில்
இணைக்கப்பட்டது)




**வா**னத்திலே பறந்து கொண்டேயிருந்தார் குருவியார். திடீரென பளபளவென்று ஏதோ தெரிந்தது! சடார் என்று இறங்கி வந்து பார்த்தால் — ஸ்ரீமான் நிஜலிங்கப்பாவின் தலை!

''என்னப்பா, குருவியாரே! எங்கே வந்தே?'' என்று கேட்டார்.

''நீங்கள் முதன்மந்திரி பதவியை விட்டு விடப் போவதாகச் சிலர் சொல்லுகிறார்கள்; இன்னும் சிலர் காங்கிரஸ் அக்கிராசனர் பதவியை விட்டுவிடப் போவதாகச் சொல்லுகிறார்கள்! வேறு சிலர் நீங்கள் எதையுமே விடப் போவதில்லை, கிடைத்தால் இன்னும் சில பதவிகளை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருப்பதாகப் பேசுகிறார்கள்! இதிலே எது நிஜம் என்று தெரிந்து கொண்டு போக வந்தேன்!'' என்றார் குருவியார்.

''நிஜத்தை யார் கண்டார்கள்? கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர்!'' என்றார் நிஜலிங்கப்பா!



''ஏதோ, ஹநுமந்தையா வந்திருக்கிறார். அவரை இருபத்தைந்து காங்கிரஸ் எம்.எல்.ஏ.க்கள் பெங்களூர் விமான நிலையத்துக்குப் போய் வரவேற்றிருப்பதாகத் தெரிகிறதே!'' என்றார் குருவியார்.

''ஹநுமத் பிரபாவம் யாரால் சொல்லச் சாத்தியம்!'' என்றார் நிஜலிங்கப்பா.

''ஏது இன்று வேதாந்த மயமாக இருக்கிறது. பேச்சு!'' என்றார் குருவியார்.

''இடைஞ்சலான கேள்வி கேட்டால் தப்பித்துக் கொள்ள இந்து சாஸ்திர வாசகங்கள் உதவுவது போல் வேறு எதுவுமே உதவுவதில்லை'' என்றார் நிஜலிங்கப்பா!

''நிஜத்தைச் சொல்லிவிட்டார் நிஜலிங்கப்பா! அவர் வாழ்க!'' என்று விண்ணதிர வாழ்த்தி விட்டு விண்ணென்று பறந்தார் குருவியார்.

**எ**ன்றும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தது! யார் முகத்திலிருந்து இப்படி வெடிக்கிறது என்று குருவியார் கீழே இறங்கி வந்து பார்த்தால், காமராஜ்!

''ஐயா! யார் மேலே இம்பிட்டுக் கோவம்?'' என்று குருவியார் கேட்டார்.

''அந்த நிஜலிங்கப்பாமேலேதான்!''

''ஏன்?''

''நான் தமிழகத்தை விட்டு அகில இந்திய காங்கிரஸ் தலைவரானதினாலேதான் — தமிழகத்தில் காங்கிரஸ் தோற்றது என்று சொல்கிறாரே! தமிழ் நாட்டில் மட்டும்தான் தோற்றதா? ஒரிஸ்ஸாவிலே தோற்கவில்லையா? வங்கத்திலே தோற்கவில்லையா? பஞ்சாபிலே தோற்கவில்லையா? உ. பி.யிலே தோற்கவில்லையா? இப்படி எத்தனை மாகாணங்களில் தோற்றது! அதற்கெல்லாம் யார் காரணமாம்?''

''நீர்தான்?'' என்று ஒரு போடு போட்டார் குருவியார்.

''நானா?'' என்று அலறினார் காமராஜ்.

''ஆமாம், தமிழகத்தை விட்டுப் போனதினால் தமிழகத்தில் காங்கிரஸ் தோற்றது. அகில இந்திய காங்கிரஸ் தலைவராக வந்ததால் அத்தனை மாகாணங்களும் தோற்றதாகப் பேசிக் கொள்ளுகிறார்களே, உங்களுக்குத் தெரியுமா?'' என்றார் குருவியார்.

இதைச் சொன்னவுடன் காமராஜுக்குக் கோபம் இன்னும் அதிகமாகி விட்டது. ''என்ன சொன்னே? என்ன சொன்னே?''

''நான் சொல்லவில்லை. உங்க உத்தரப் பிரதேச காங்கிரஸ் தலைவர்தான் சொன்னார், 'காமராஜ் அல்ல அவர்; யமராஜ்' என்று!'' குருவியார் எப்பொழுதோ உத்தரப் பிரதேச ஸி. பி. குப்தா சொன்னதை ஞாபகப்படுத்தி விட்டுச் சிட்டாய்ப் பறந்தார்.



''இன்றிரவு நான் மகிழ்ச்சியுடன் இருக்கிறேன். எதைப் பற்றியும் எனக்குக் கவலையில்லை. யாரைக் கண்டும் நான் பயப்படவில்லை. கடவுள் வருவதை என் கண்கள் காண ஆரம்பித்து விட்டன.''

**டாக்டர் மார்ட்டின் லூதர் கிங்கின் கடைசிப் பேச்சிலிருந்து**

(ஸ்டேட்ஸ்மன் — பாபு.)

# ரசாயன டாக்டர்

விஞ்ஞான உலகிலே ரஸாயனத் துறை மிக விரிவும் வியப்பும் அளிக்கும் துறை. ஏதோ இரண்டு மூலப் பொருள்களைச் சேர்த்தால் அவற்றிலிருந்து முற்றிலும் மாறுபட்ட குண நலன்களுடன் கூடிய புதிதானதோர் ரசாயனப் பொருள் உருவாகிறது. பிரத்தியேகமான வீரியமும் சக்தியும் குண நலனும் பெற்று மனித சமுதாயத்துக்கு எப்படி எப்படியெல்லாமோ பயனுகிறது. ரசாயன ஆராய்ச்சிகளில் ஈடுபாடு கொண்டவர்களை இப்பரிசோதனைகள் பசி தாகத்தைக் கூட மறக்கச் செய்துவிடும்! இத்தகைய ஆராய்ச்சியில் ஈடுபட்டு உலக விஞ்ஞானிகளின் பாராட்டையும் கௌரவத்தையும் பெற்றவர் டாக்டர் டி. ஆர். கோவிந்தாச்சாரி. 1915ம் ஆண்டு ஜூலை மாதம் பிறந்த இவர் சென்னை பிரஸிடென்ஸி கல்லூரியில் பயின்று எம். எஸ்ஸி. பட்டம் பெற்றார். பிறகு அவர் ஆராய்ச்சி செய்து தாம் கண்ட புதிய முடிவுகளை வெளியிட்டதன் பயனாக டாக்டர் பட்டமும் பெற்றார். இங்கிருந்து இங்கிலாந்து சென்று ஆக்ஸ்போர்டு சர்வ கலாசாலையில் ஆராய்ச்சி செய்வதற்காக பம்பாயில் கப்பல் ஏற இருந்தார். அந்தச் சமயம் இரண்டாவது உலக யுத்தம் மூண்டது. அவர் பிரயாணம் தடைப்பட்டது. மிகுந்த ஏமாற்றத்துடன் சென்னைக்குத் திரும்பினார்.

யுத்தம் முடிந்ததும், இந்திய சர்க்காரின் உபகாரச் சம்பளம் பெற்று அமெரிக்காவில் இலினாய் சர்வகலாசாலைக்குத் தமது ஆராய்ச்சிகளைத் தொடர்ந்து நடத்தச் சென்றார்.

அமெரிக்காவிலே 'ஆர்கானிக் கெமிஸ்டிரி' பிரிவில் முன்னணி ஆராய்ச்சியாளர் என்று மதிக்கப்பெற்றவரான பேராசிரியர் ரோஜர் ஆடம்ஸ் என்பாருடன் சேர்ந்து மூன்று ஆண்டுகள் தமது மேற் படிப்பையும் ஆராய்ச்சிகளையும் தொடர்ந்தார். அப்பேராசிரியருடன் கழித்த அந்த மூன்று ஆண்டுகள் தமது வாழ்க்கையிலேயே மிகுந்த பயனுள்ள நாட்கள் என்கிறார் டாக்டர் கோவிந்தாச்சாரி. அமெரிக்காவிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பியதும் சென்னை ராஜதானிக் கல்லூரியில் ரசாயனப் பேராசிரியராகவும், பின்னர் கல்லூரிப் பிரின்ஸிபாலாகவுமே பணியாற்றினார். 1950 முதல் 1962 வரை அவர் சென்னை ராஜதானிக் கல்லூரியில் இருந்த காலத்தில் தாவரப் பொருட்களின் ரசாயனத் தத்துவத்தைப் பற்றிக் கிட்டத்தட்ட 100 ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளியிட்டிருக்கிறார்.



டாக்டர் கோவிந்தாச்சாரி

அலோபதி மருந்துகள் சாப்பிடுபவர்கள் ஸிபா (CIBA) என்றால் பிரசித்திபெற்ற மருந்துகள் தயாரிப்பவர்கள் என்று உடனே அறிவார்கள். இந்த ஸிபா ஸ்தாபனத்தார், பம்பாயில் கோரேகான் பகுதியில் ரசாயன ஆராய்ச்சிக் கூடம் நிறுவத் திட்டமிட்டார்கள். அந்த ஆராய்ச்சிக் கூடத்தைத் திறம்பட நிர்வகிக்க, ஆர்கானிக் கெமிஸ்டிரியின் தாவர வர்க்க ஆராய்ச்சியில் புலமை பெற்ற ஒருவர் வேண்டுமே என்று தேடினார்கள். அவர்களுக்கு டாக்டர் டி. ஆர். கோவிந்தாச்சாரியை விடச் சிறந்த நிபுணர் எங்கே கிடைக்கப் போகிறார்? 1962லிருந்து அந்த ஸ்தாபனத்தின் தலைவராக, முக்கியமாக ஆராய்ச்சித் துறையின் தலைவராகப் பணியாற்றி வருகிறார் டாக்டர் கோவிந்தாச்சாரி.

இந்த ஆராய்ச்சிக் கூடத்தை ஜவாஹர்லால் நேரு திறந்து வைத்தார். அப்போது அவர், ''இந்த ஸ்தாபனம், இந்நாட்டுக்கு மட்டுமல்ல, உலகத்துக்கே நல்ல பணி புரியும்'' என்று கூறினார். அவர் கூறிய வாக்குப் பலித்து வருகிறது.

இந்த ஆராய்ச்சிக் கூடத்தில், அதிகமான ரத்த அழுத்தம்; மூளை நோய்கள்; குடலில் கொக்கிப் புழு முதலியவைகளால் உண்டாகும் நோய் - ஆகியவற்றுக்கு எந்தத் தாவரத் தாதுச் சேர்க்கைகள் குணம் விளைவிக்கின்றன என்பதைப் பற்றி ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன. குடும்பக் கட்டுப்பாட்டுத் துறையிலும் ஆராய்ச்சிகள் நடைபெறுகின்றன.

செயற்கைச் சாயங்கள் செய்வதிலும் இந்த ஆராய்ச்சிக் கூடம் ஈடுபட்டிருக்கிறது. டாக்டர் கோவிந்தாச்சாரியின் கீழ் சுமார் எட்டு அல்லது பத்து விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். இந்த ஆராய்ச்சிக் கூடம் ஆண்டு ஒன்றுக்கு அறுபது லட்ச ரூபாய் ஆராய்ச்சிகளுக்கெனச் செலவழிக்கிறது என்றால் இதன் முக்கியத்துவத்தை அறிந்து கொள்ளலாம்.

டாக்டர் கோவிந்தாச்சாரி அமெரிக்கா முதல் ஆஸ்திரேலியா வரையிலுள்ள பலப்பல விஞ்ஞான ஆராய்ச்சிக் கழகங்களின் பெறற்கரிய மதிப்பையும் பாராட்டையும் பெற்றிருக்கிறார்.

தோட்டக் கலை அவருக்கு விருப்பமான பொழுது போக்கு. அவர் ஆராய்ச்சியில் மேன்மேலும் பல புதிய அம்சங்களைக் கண்டு நாட்டுக்கு நலன் விளைக்க இறைவன் அருள்வானாக!

ஆதாரம்: ''ஹிந்து''



தென்னக ரயில்வே, சென்னையில் பணி புரியும் திருமதி கே. ஜி. சுசீலாவின் குமாரத்தி சௌ. சூர்ய குமாரிக்கும், சிரஞ்சீவி பாலசுப்ரமணியத்துக்கும் சமீபத்தில் திருப்பதியில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. அதையொட்டி மயிலை உட்லண்ட்ஸில் நடைபெற்ற தேநீர் விருந்துக்கு ஏராளமான நண்பர்களும், உறவினர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர். வாழ்க மணமக்கள் !

# ஸ்ரீ கிருஷ்ண கான சபா

கிரிபித் ரோடு, தியாகராயநகர் – சென்னை-17 போன் : { 441953 / 442806

## நாடக விழா, (மே & ஜூன் 68)

ஸௌத் இந்தியன் தியேட்டர்ஸ் (புது டில்லி) அளிக்கும்

| | | | |
|---|---|---|---|
| 10-5-68 | ராங் நம்பர் [WRONG NUMBER] | ... | பி. ஏ. கே. |
| 11-5-68 | பகடையின் குரல் | ... | பி. ஏ. கே; |
| 12-5-68 | மிஸ் ஜானகி | 'ஆனந்த விகடன்' | – 'தேவன் |
| 14-5-68 | பட்டணத்தில் காதல் ! | ... | மெரீனா |
| 16-5-68 | பணம் பேசுகிறது | ... | பி. எஸ். ஆர். |
| 17-5-68 | இம்பர்ஃபெக்ட் மர்டர் [(Im) PERFECT MURDER] | | பி.வி.ஒய்.ராமன் |
| 18-5-68 | 'மூடு பனி' | ... | பி. ஏ. கே. |

பம்பாய் தமிழ்ச் சங்கம் அளிக்கும்

| | | | |
|---|---|---|---|
| 24-5-68 | அருணோதயம் | ... | சூடாமணி |

தியேட்டர் குரூப் (மதராஸ்) அளிக்கும்

| | | | |
|---|---|---|---|
| 2-6-68 | சௌகார் ஜானகி நடிக்கும் மோஹன விலாஸ் | | பி.வி.ஒய்.ராமன் |

ராகினி கிரியேஷன்ஸ் அளிக்கும்

| | | | |
|---|---|---|---|
| 8-6-68 & 9-6-68 | நவகிரஹம் | ... | கே. பாலசந்தர் |

ஸீஸன் டிக்கெட்டுகள்; ரிஸர்வ்டு: ரூ.100/- & ரூ. 60/- I & II வகுப்பு ரூ.40/-ரூ.25/-





# வெடித்தது அணுகுண்டு!

"நந்தலால்"

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்து ஐந்தாம் ஆண்டு ஆகஸ்டு 6ந் தேதி நடுநிசிக்கு மேல் உலகத்துக்கே நாசம் விளைவிக்கும் சாதனத்தைச் சுமந்து சென்ற விமானம் ஜப்பானிய நகரங்களை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. யுத்தத்தைச் சட்புட்டென்று முடிப்பதற்காக அணுகுண்டு வீசி எதிரி நாடான ஜப்பானையே அழித்து விட வேண்டும் என்பது அமெரிக்காவின் திட்டம். இதில் விசேஷம் என்னவென்றால் அந்த விமானத்தில் பணி செய்பவர்களுக்கே அதில் அணுகுண்டு இருக்கிறது என்பதும் அது ஜப்பானிய நகரத்தின் மீது வீசப்படவிருக்கிறது என்பதும் தெரியாது.

கர்னல் பால் டிப்பெட்ஸ் என்பவரிடம் தான் இந்தக் குண்டு வீசும் மகத்தான பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருந்தது. ஜப்பானின் நகரங்களான ஹிரோஷிமா, நாகஸாகி இவ்விரு நகரங்கள் மீது வீசுவதற்காகக் கொண்டு செல்லப்பட்ட அந்த நாசகாரக் குண்டு 120 அங்குல நீளம், 28 அங்குல குறுக்களவு 9000 பவுண்டு எடை கொண்டது. இதற்கு ''சின்னப் பயல்'' (Little Boy) என்று செல்லப் பெயரிடப்பட்டிருந்தது. இந்தக் குண்டினால் ஏற்படும் விளைவுகளையும் சேதங்களையும் படமெடுக்க இதன்பின் இரண்டு விமானங்கள் சென்றன.

இந்த அணுகுண்டை ஏற்றிச் சென்ற பி.29 விமானம் காலை 7-25 மணிக்கு ஹிரோஷிமா மேல் பறந்தது. இரண்டே நிமிஷங்களில் ஹிரோஷிமாவின் மீது குண்டு வீசப்பட்டது. 78,150 ஆண், பெண், குழந்தைகள் பலியாயினர். தப்பிப் பிழைத்தவர்கள் பல வித நோய்களுள்ளாயினர். இனி வரும் சந்ததியினரின் சுகாதாரமும் பாதிக்கப்படும் என்ற பீதியும் ஏற்பட்டிருந்தது.

இந்த அணுகுண்டை உருவாக்க நாற்பது ஆண்டுகள் ஆராய்ச்சி நடைபெற்றதாம். நியூமெக்ஸிகோவில் ஆல்பர்கர்க் என்ற இடத்தில் இதே ஆண்டு (1945) ஜுலை 16ந் தேதி அணுகுண்டு பரீட்சார்த்தமாக வெடிக்கப்பட்டது. இந்த அணுகுண்டுகளை உற்பத்தி செய்த விஞ்ஞானிகள் ஜப்பானிய நகரின் மீது குண்டு வீசியதைப் பலமாகக் கண்டித்தனர்.

## நீதிமன்றத்தில் கீதை

இந்தியர்களுக்குச் சுதந்திரம் வேண்டும் என்று போராடத் தெரியுமே ஒழிய நிர்வாகத்தை நடத்தத் தெரியாது என்று சொன்னவர்களுக்கு முகத்தில் கரியைப் பூசுவதுபோல் ராஜாஜி அவர்கள் 1937 முதல் 1939 வரை சென்னை ராஜ்ய நிர்வாகத்தை நடத்தினார்.

இரண்டாவது உலக மகாயுத்தத்தில் இந்தியாவைக் கலந்து கொள்ளாமலேயே அதை யுத்தத்தில் சிக்க வைத்ததை ஆட்சேபித்து மந்திரிசபைகள் ராஜிநாமா செய்ய வேண்டும் என்று காங்கிரஸ் தீர்மானித்தது. இதை யொட்டிப் பதவியைத் துறந்து வெளிவந்த ராஜாஜி இதன் பிறகு தனி நபர் சத்தியாக்கிரகத்தில் கலந்து கொள்ள முடிவு செய்தார்.

சென்னை பிரதம மாகாண மாஜிஸ்திரேட்ஜுப் அப்பாஸ் அலி முன்பு தனி நபர் சத்தியாக்கிரகம் செய்த 'குற்றத்'துக்காக ராஜாஜி ஆஜர் செய்யப்பட்டார். அப்பாஸ் அலிக்குத் தம் கடமையையும் செய்யவேண்டியிருந்தது: ராஜாஜியையும் 'தண்டிக்க' வேண்டியிருந்தது. பகவத்கீதையிலுள்ள பின் வரும் சுலோகத்தைக் கூறி ஆறுமாத கடுங் காவல் தண்டனை அளித்தார்.

கர்மண்யேவாதி காரஸ்தே
மாபலேஷு கதாந
மாகர்ம பலஹேதுர் பூர்மாதே
ஸங்கோஸ்த்வ கர்மணி.

இதன் அர்த்தம்: தொழில் செய்யவே தான் உனக்கு அதிகாரம். அதன் பயன்களில் எப்போதுமே உனக்கு அதிகாரமில்லே. கடமையைச் செய்யாமல் இருப்பதில் விருப்பம் கொள்ளாதே.



# வழிப்பறிக் கொள்ளை!

நாடோடி

அதிசயபுரிக்குச் சென்று வெகு நாட்களாகிவிட்டதால், அங்கு போக வேண்டும் என்று திடீரென்று எண்ணம் தோன்றவே, என் மனோரதத்தில் ஏறிக் கொள்ள, அடுத்த கணமே நான் அதிசயபுரியில் இருந்தேன்.

நான் இறங்கின இடத்தில் ஒரு பெருங் கூட்டம் இருந்தது. ஏதோ ஏலம் நடந்து கொண்டிருந்தது போலத் தோன்றியது. ஏலம் விட்டவர் கையில் ஒரு சாமானையும் காணவில்லை. ஆனால் ஏலம் கேட்டவர்கள் போட்டி போட்டுக் கொண்டு இரண்டு லட்சம், மூன்று லட்சம், என்று லட்சம் லட்சமாக ஏலத் தொகையை உயர்த்திக் கொண்டே போனார்கள். கடைசியில் ஒருவர் பதினைந்து லட்சம் என்றதும், அதற்கு மேல் யாரும் கேட்காததால், ஏலம் விடுகிறவர், "பதினைந்து லட்சம் ஒரு தரம், பதினைந்து லட்சம் இரண்டு தரம், பதினைந்து லட்சம் மூன்று தரம்" என்று சொல்லி இன்னார் ஏலம் எடுத்தார் என்று ஏலம் எடுத்தவரின் பெயரை அறிவித்தார்.

"ஆமாம், இங்கு என்ன ஏலம் நடந்தது?" என்று பக்கத்தில் நின்றுகொண்டிருந்த ஒருவரைக் கேட்டேன்.

அவர் என்னை மேலும் கீழும் பார்த்தார். "நீங்கள் இந்த நாட்டுக்கே புதிது என்று தோன்றுகிறதே! அதுதான் இது என்ன ஏலம் என்று உங்களுக்குப் புரியவில்லை. நீங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்?" என்று கேட்டார்.

"நான் பூலோகத்திலிருந்து வருகிறேன். நான் ஓர் இந்தியன்" என்று பதில் சொன்னேன்.

"இப்பொழுது ஏலம் விடப்பட்டது வழிப்பறிக் கொள்ளை கடை நெ. 973" என்று அவர் பதில் சொன்னார்.

"அப்படி யென்றால்?"

"நீங்கள் இந்த ஊருக்குப் புதிதானவரையால் இது உங்களுக்கு விளங்காது. என்னோடு வாருங்கள். ஒரு வழிப்பறிக் கொள்ளைக் கடைக்கே உங்களை அழைத்துக் கொண்டு போய் விஷயத்தை விளக்குகிறேன்" என்று சொல்லி, என்னைப் பக்கத்தில் இருந்த ஒரு சின்ன வெற்றிலை பாக்குக் கடைக்கு அழைத்துச் சென்றார். நம் ஊர் வெற்றிலை பாக்குக் கடைகளைப் போலத்தான் அதுவும் இருந்தது. பீடி, சிகரெட், சோடா, மிட்டாய், வாழைப் பழம் முதலியன அங்கு விற்பனைக்காக வைக்கப்பட்டிருந்தன.

"ஆமாம், இது சாதாரண வெற்றிலை பாக்குக் கடைதானே? இதில் என்ன விசேஷம் இருக்கிறது?" என்று கேட்டேன்.

"இது சாதாரண வெற்றிலை பாக்குக் கடையா? சற்றுத் தலையை நிமிர்த்திப்பாரும்" என்றார் அவர்.

தலையை நிமிர்த்திப் பார்த்தேன். கடையின் மேல் பக்கம் ஒரு பெரிய விளம்பரப் பலகை இணைக்கப்பட்டிருந்தது. அதில், "வழிப்பறிக் கொள்ளைக் கடை எண்: 563. அரசினரின் லைசென்ஸ் பெற்றது. லைசென்ஸ் : 00123" என்று கொட்டை எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தது.

நாங்கள் அந்தக் கடையின் பக்கம் சென்ற சமயம் ஒரு தொழிலாளி தம் தொழிற்சாலையிலிருந்து அந்தப் பக்கமாக வீடு திரும்பிக் கொண்டிருந்தார். உடனே அந்தக் கடையிலிருந்து இரண்டு குண்டர்கள் வெளிப்பட்டு அவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"கையில் எவ்வளவு பணம் வைத்திருக்கிறாய்? மரியாதையாகக் காண்பி!" என்றார்கள் குண்டர்கள்.

"நான் எதற்காக என்னிடம் உள்ள பணத்தை உங்களிடம் காட்ட வேண்டும்?" என்று கேட்டார் அந்தத் தொழிலாளி.

"எங்களை யார் என்று நினைத்துக் கொண்டு நீ இப்படிப் பேசுகிறாய்? நாங்கள் இந்த வழிப்பறிக் கொள்ளைக் கடை எண் 563யைச் சேர்ந்தவர்களாக்கும்! இதோ, நாங்கள் மாட்டிக் கொண்டிருக்கும் அத்தாட்சித் தகடுகளைப் பார்த்து விட்டுப் பணத்தைக் கொடுக்கப் போகிறாயா, இல்லை, ஒரு கும்மாக் குத்துக் கொடுத்துத்தான் உன் பணத்தைக் கறக்க வேண்டுமா?" என்று அந்தக் குண்டர்கள் கேட்டார்கள்.

உடனேயே அந்தத் தொழிலாளி பயந்து கொண்டு, தன் ஜேபியில் இருந்த பர்ஸை அவர்களிடம் நீட்ட, அவர்கள் அதில் எத்தனை ரூபாய் இருக்கிறது என்று பார்த்தார்கள். அதில் அவர் அன்று சம்பாதித்த மூன்று ரூபாய்தான் இருந்தது. உடனே அவர்கள், "இந்தா, முக்கால் பங்கான இரண்டேகால் ரூபாயை நாங்கள் எடுத்துக்



பெண்கள் வாசலில் கோலமிடும் அழகை, 'கோலமிடும் கையே! குனிந்து தெருவாசல் நிதம் கோலமிடும் கையே!' என்று வியந்து கொண்டாடுகிறார் கவிஞர். பொருளடக்கப் பக்கத்தில் விசிறிக்கோலம் நம் கண்ணையும் கருத்தையும் கவர்கிறது.

கோலம் போட்டவர்: உமாதேவி
படம் எடுத்தவர்: என். பி. சுந்தரம்

கொண்டு விட்டோம். மீதி முக்கால் ரூபாயை நீ வைத்துக் கொள்'' என்று சொல்லி, அந்த இரண்டேகால் ரூபாயைத் தாங்கள் எடுத்துக் கொண்டு அவரிடம் முக்கால் ரூபாயைக் கொடுத்தார்கள். அதைப் பெற்றுக் கொண்டு அத்தொழிலாளி தம் வீடு நோக்கிச் சென்றார்.

''இது என்ன பட்டப் பகல் கொள்ளையாக இருக்கிறதே! இதைத் தடுக்க உங்கள் ஊரில் போலீஸ் கிடையாதா?'' என்றேன்.

''போலீஸ்காரர்கள் இல்லாமல் என்ன! ஆனால் இது விஷயத்தில் தலையிடுவதற்கு அவர்களுக்கு உரிமையில்லை'' என்று அவர் எனக்குப் பதில் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, ஒரு போலீஸ்காரர் அந்தப் பக்கமாக வந்தார். உடனே அந்தக் குண்டர்கள் அந்தப் போலீஸ்காரரையும் வளைத்துக் கொண்டார்கள். ''ஜேபியில் என்ன வைத்திருக்கிறாய்! அதை மரியாதையாக எங்களிடம் காண்பித்து விடு. கால் பங்கை நீ வைத்துக் கொள், முக்கால் பங்கை எங்களிடம் கொடு'' என்றார்கள்.

பாவம், அந்தப் போலீஸ்காரர் மறு பேச்சின்றி, கையில் வைத்திருந்த நான்கு ரூபாயில் மூன்று ரூபாயை அவர்களிடம் கொடுத்து விட்டுச் சென்றார்.

''இது என்ன அக்கிரமமாக இருக்கிறது! போலீஸ்காரர்களிடமிருந்தும் இவர்கள் பணத்தைப் பிடுங்குகிறார்களே!'' என்றேன்.

''போலீஸ்காரர்களாக இருந்தால் என்ன! அவர்களும் ஏழைகள்தானே? ஏழைகளிடமிருந்து முக்கால் பங்கைப் பிடுங்கிக் கொள்ள இவர்களுக்குப் பூரண உரிமை உண்டு. பணக்காரர்கள், நடுத்தர வகுப்பினர், இவர்கள் பக்கம்தான் இவர்கள் நெருங்க மாட்டார்கள்.''

''ஆமாம், இவர்கள் இப்படி ஏழைகளை வழிப்பறிக் கொள்ளையடிக்கிறார்களே, இதை எப்படி உங்கள் அரசினர் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கின்றனர்?''

''அரசினரே செய்துள்ள ஏற்பாட்டுக்கு அவர்களே எப்படி முட்டுக்கட்டையாக இருப்பார்கள்?''

''இந்த அக்கிரம ஏற்பாடு அரசினரே செய்ததா! பட்டப் பகலில் வழிப்பறிக் கொள்ளையடிக்க அனுமதி கொடுத்திருக்கிறார்களா? எனக்கு என்னவோ இதெல்லாம் வெகு அக்கிரமமாகப்படுகிறது. இப்படி ஏழை மக்களை வாட்டும் அரசாங்கமும் ஒரு அரசாங்கமா?'' என்று சொன்னேன் நான்.

உடனே அவர் என்னை ஏற இறங்கப் பார்த்தார். ''என்ன ஐயா, பெரிய வேதாந்தம் பேசுகிறீர்! நீர் பூலோகவாசி, அதுவும் இந்தியாவிலிருந்து வருகிறவர் என்று சொன்னீர். எல்லாம் உங்கள் நாட்டைப் பார்த்துத்தான் நாங்கள் வழிப்பறிக் கொள்ளைக் கடைகளை ஏலம் விட்டுப் பணம் சம்பாதிக்கும் வழியையே கண்டுபிடித்தோம் — கள்ளுக் கடைகளை ஏலம் விடுகிறீர்களே?''

''கள்ளுக்கடைகளில் நாங்கள் என்ன உங்களைப் போல் வழிப்பறி நடத்துகிறோமா? வருகிறவர்களுக்கு நாங்கள் கள்ளைக் கொடுக்கிறோம், அவர்கள் காசைக்கொடுக்கிறார்கள்.''

''ஆனால் அதன் இறுதி முடிவு என்ன! ஏழை மக்கள் பாடுபட்டுச் சம்பாதிக்கும் பணத்தில் முக்கால் பங்கைக் கள்ளுக்கடைக்காரர்கள் பிடுங்கிக் கொள்ள, அது பின்னர் அரசாங்கத்துக்குப் போய்ச் சேருகிறது. உங்கள் கள்ளுக் கடைகளின் நோக்கம் என்ன! மக்கள் கள்ளைக் குடித்துக் கவலைகளை மறக்க வேண்டும் என்பதா நோக்கம்? எப்படி அவர்கள் பணத்தைப் பிடுங்குவது என்பதுதானே நோக்கம்? எப்பொழுது ஏழை மக்களின் பணத்தைப் பிடுங்குவது தான் நம் நோக்கமோ, நேரடியாகப் பணத்தைப் பிடுங்காமல், அவர்களுக்குக் கள்ளைக் கொடுத்து, அவர்கள் உடம்பையும் உள்ளத்தையும் கெடுப்பதுடன், அவர்கள் குடும்ப வாழ்க்கையையும் அவலமாக்குவானேன்' என்று நாங்கள் நினைத்தோம். ஆகவே தான் உங்கள் கள்ளுக் கடைகளை நன்கு ஆராய்ந்து, இம்மாதிரி வழிப்பறிக் கொள்ளைக் கடைகள் வைப்பது என்று தீர்மானித்தோம். என்னைக் கேட்டால், நீங்களும் ஏழைகளிடமிருந்து பணம் பறிப்பதற்கு, கள்ளைக் கொடுத்து அவர்களைக் கெடுக்காமல், எங்களைப் போல் வழிப்பறிக் கொள்ளைக் கடைகள் வைத்துக் கொள்ளலாம் என்று யோசனை கூறுவேன்'' என்றார்.

இதற்கு என்ன பதில் சொல்வது என்று எனக்குத் தெரியவில்லை. ஆகவே, மனோ ரதத்தில் ஏறிக் கொண்டு பூலோகம் திரும்புவதுதான் சரி என்று தீர்மானித்துப் பூலோகம் திரும்பினேன்.



விளையும் பயிர்

# 'எனக்கும் கொடுங்கள் தண்டனை!'

தெருக் கோடியில்தான் பள்ளிக்கூடம். முதல் மணி அடித்ததும் புத்தகக் கட்டைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டால் இரண்டாவது மணி அடிப்பதற்குள் பள்ளிக்கூடத்துக்குப் போய்விடலாம்.

அன்று அண்ணனும் தம்பியும் விடியற்காலை எழுந்ததும் எழுந்திராததுமாகக் கை கால்களைக் கழுவிக் கொண்டு பழையமுது உண்டு வீட்டுக் கணக்குப் போட உட்காருகின்றனர். எத்தனை முயன்றும் தம்பியினால் தன் வீட்டுக் கணக்கைப் போடவே முடியவில்லை. ''அண்ணா !'' என்கிறான்.

''என்னடா ?''

''வாத்தியார் வீட்டில் போட்டு வருமாறு இரண்டு கணக்குகள் கொடுத்தார், அண்ணா! போட்டுப் போட்டுப் பார்க்கிறேன், வரவில்லை, அண்ணா!'' என்கிறான் தம்பி.

''அதற்கு என்னை என்னடா செய்யச் சொல்லுகிறாய்?''

''போடக் கொஞ்சம் வழி சொல்லிக் கொடேன், அண்ணா ! கணக்குகளைப் போட்டுக் கொண்டு போகா விட்டால், வாத்தியார் பெஞ்சு மேல் நிறுத்துவாரே! பிரம்படி விழுமே !'' — இதைக் கூறும்பொழுது தம்பிக்கு அழுகையே வந்து விடுகிறது.

தம்பியை அழவிட்டு வேடிக்கை பார்க்கும் பழக்கம் அண்ணனுக்கு இல்லை. எனவே, சிலேட்டுப் பலகையை எடுத்து வைத்துக் கொண்டு தம்பியின் இரண்டு கணக்குகளையும் போடுகிறான். அவன் வகுப்புக்கே சற்றுக் கஷ்டமான கணக்குகள்தாம் அவை. ஏறக்குறைய ஒரு மணி நேரம் அழித்து அழித்துப் போட்ட பிறகே சரியான விடை வருகிறது. அதைத் தம்பிக்கும் புரியும்படியாகச் சொல்லுகிறான். தம்பி அதைப் பார்த்து முத்து முத்தான எழுத்தில், அடித்தல் திருத்தல் ஏதுமின்றி எழுதிக் கொள்கிறான்.

இதே சமயம் பள்ளி மணி அடிக்கவே, இருவரும் விழுந்தடித்துக் கொண்டு ஓடுகின்றனர். வகுப்பில் நுழையும் முன்பே, வகுப்புச் சட்டாம்பிள்ளை மாணவர்களுடைய நோட்டுகளை வாங்கி உபாத்தியாயர் மேஜைமீது வைக்கிறான்.

நோட்டுக்களை ஒவ்வொன்றாகப் பிரித்துப் பார்த்த உபாத்தியாயருக்கு ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது. ஏனென்றால், பலர் போடவில்லை; போட்டவர்களும் சரியாகப் போடவில்லை. எனவே, கையில் பிரம்பை எடுத்துக் கொண்டு ஒவ்வொரு மாணவனிடமும் சென்று கையை நீட்டச் சொல்கிறார். 'சுரீர்' என்று ஓர் அடி வைக்கிறார். அதே மூச்சில் பெஞ்சியில் ஏறி நிற்குமாறும் பணிக்கிறார்.

ஒரே ஒரு மாணவனின் அருகில் வந்ததும், ''நீதான் கெட்டிக்காரன்! கணக்கைச் சரியாகப் போட்டிருக்கிறாய்!'' என்று மனமாரப் புகழ்ந்து முதுகில் தட்டிக் கொடுக்கிறார். அவன்தான் அந்தத் தம்பி.

இதைக் கேட்டதும் அவன் அழத் தொடங்குகிறான். ''எதற்காகடா அழுகிறாய்? நான் உன்னை அடிக்கவில்லையே!'' என்கிறார்.

பையனுக்கு அன்னையின் சொல் நினைவுக்கு வருகிறது. '''எப்பொழுதும் உண்மை பேசு ! பிறருக்கு மறந்தும் தீங்கு நினையாதே' என்று அம்மா சொல்வாளே! நாமாக இந்தக் கணக்குகளை எங்கே சரியாகப் போட்டோம்? அண்ணாவல்லவா சரியாகப் போட்டுக் கொடுத்தார்? அவர் உதவியில்லையென்றால் மற்றப் பையன்களைப் போல் நானும் ஒன்றும் போடாமல் வந்திருக்க வேண்டும். அல்லது தப்பாகப் போட்டுக் கொண்டு வந்திருக்க வேண்டும்! அப்பொழுது எனக்கும் அடி கிடைத்திருக்கும், பெஞ்சி மேல் ஏறி நிற்கும் தண்டனை கிடைத்திருக்கும்! அண்ணாவின் உதவியோடு நான் ஒருவன் சரியாகப் போட்டுக் கொண்டு வந்ததால்தானே மற்றப் பையன்களுக்கு இந்தத் தண்டனை? எல்லோருமே சரியாகப் போடவில்லையென்றால், உபாத்தியாயர் இப்படித் தண்டனை கொடுக்காமல் எல்லாருக்கும் சொல்லிக் கொடுத்திருப்பார் அல்லவா? இப்பொழுது நம்மைப் பொய் சொல்லும் குற்றத்தோடு பிறருக்குத் தீங்கு இழைக்கும் குற்றமும் அல்லவா பற்றிக் கொண்டு விட்டது?'' என்று எண்ணியவன் துக்கம் தொண்டையை அடைக்க, ''சார் ! எனக்கும் பிரம்படி கொடுக்க வேண்டும் ; பெஞ்சியின் மேல் ஏறி நிற்கும் தண்டனை அளிக்க வேண்டும்!'' என்கிறான் விசித்தவாறு.

''சரியாகப் போட்டவனுக்குத் தண்டனையா ?'' உபாத்தியாயர் வியக்கிறார்.

''இதை நான் போடவில்லை, சார் ! என் அண்ணா போட்டுக் கொடுத்தார்!'' என்று நடந்தது நடந்தபடியே கூறுகிறான்.

உபாத்தியாயருக்கு அவன் உண்மை உரைத்ததில் பரம திருப்தி. அடித்த அடியை வேண்டுமானாலும், அவரால் திரும்பப் பெற முடியவில்லையே ஒழியப் பெஞ்சியின் மேல் பையன்கள் ஏறி நிற்கும் தண்டனையை ரத்து செய்து விடுகிறார் ! அதோடு அந்தச் சிறுவனைத் தட்டிக் கொடுத்து, ''உண்மை உனக்கு உயர்வு தரும்; ஒரு நாளும் அதைக் கைவிடாதே! அதுவும் உன்னைக் கைவிடாது!'' என்று உபதேசிக்கிறார்.


கோகலே

இப்படி உண்மையின் பலம் கொண்டு உயர்ந்து, மகாத்மா காந்திக்கே அரசியல் குருவாகத் திகழ்ந்த கோபாலகிருஷ்ண கோகலே அவர்கள் நம் நாட்டுச் சுதந்திரச் சிற்பிகளின் வரிசையிலே சிறந்ததோர் இடம் பெற்றதும் உண்மை அல்லவா? —ரா. வீ.

ஐயாயிரம் அடி உயரத்துக்கு மேலே கண் கொள்ளாக் காட்சியாக விளங்கும் எழில் மிகுந்த பசுமையான தேயிலைத் தோட்டம் இது. இந்தப் பச்சைப் பனிமலை மீதுதான் பிரசித்திபெற்ற தேயிலை கொழிக்கிறது.

இலங்கைப் பொருளாதாரத்தின் முதுகெலும்பாக விளங்கும் இந்தத் தேயிலைக் கொழுந்துகளை நடுக்கும் குளிரிலே நடுங்காது கொய்யும் இவர்கள் தமிழ்த் தாய்மார்கள். ஒற்றுமையாக இணைந்து அணி அணியாக இவர்கள் மலையேறும் காட்சி சிந்தையைக் கவரும்.

— கே. வி. எஸ். மோகன்



பனி படர்ந்த மலை

# துருவங்கள் சேர்ந்தால்....?

மீண்டும் ஒரு முறை துருவங்கள் சேர்கின்றன. திரைப்பட விமர்சனம் செய்கிறார் சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்கள்.



அனுக்ரஹாய பக்தாநாம் ஸ்வேச்சயா
க்ருஹ்ணதே தநும்.

கருணாமூர்த்தியான பகவான் தன்னை பக்தர்கள் உபாசிக்கும் பொருட்டு திவ்விய மங்கள சரீரத்தை ஏற்றுக் கொள்ளுகிறார் என்று பெரியவா சொல்லி யிருக்கா. கலை மூர்த்திகளான சினிமா நட்சத்திரங்கள், விசிறிகள் தங்களை உபாசிக்கும் பொருட்டு அடிக்கடி திவ்விய மங்கள உருவங்களைத் தாங்கள் நடிக்கிற படங்களிலே அப்பப்போ எடுத்துக்கறா. இப்படித்தான் ஜெய்சங்கர் ஆகப்பட்ட நடிகாள், 'நீலகிரி எக்ஸ்பிரஸ்' என்கிற சினிமாப் படத்திலே ஒரு 'சி. ஐ.டி.' யாகத் தோற்றம் அளிக்கிறான். அசுர கணங்கள் போல அவானைத் தாக்க வரும் வில்லானை அவான் குத்தும் என்று தட்டிக் கொடுக்கும்போது பார்க்கறவாள் எழுப்பற கோஷம் செவிகளைச் செவிடாக்கச்செய்யறது.

ஆஹார நித்ரா பய மைதுனம் ச
ஸாமான்ய மேதத் பசுபிர் நராணாம்
க்ஞானம் ஹிதேஷாம் அதிகோவிசேஷோ
க்ஞானேன ஹீநா: பசுபிஸ்ஸமாநா:

ன்னு பார்த்ருஹரி சொல்லியிருக்காள். ஞானம் ஒன்றுதான் மனுஷாளை மிருகங்களிலிருந்து பேதப்படுத்திக் காண்பிக்கிறதுன்னு சொல்ருள். தனக்குப் பிடித்தமான சினிமாப் படத்தைத் தேர்ந்தெடுத்துப் போய், க்யூவில் நின்றோ, ரிசர்வ் செய்தோ, டிக்கட்டுக்கு அதிக விலை கொடுத்தோ பார்க்கிற மனுஷாளும் தங்கள் ஞானத்தைப் பயன்படுத்திண்டுதான் போருள்.

ஸ்நானம் ஸந்த்யை ஜபோஹோம
தேவதானாம்ச பூஜனம்
ஆதித்யம் வைச்வ தேவம்ச ஷட்கர்மாணி
திநே திநே

ஸ்நானம், சந்த்யை, ஜபம், ஹோமம், ஆதித்யம், வைஸ்வதேவம்ங்கற ஆறு கர்மாக்களை மனுஷாள் தினம் செய்யணும்னு பெரியவாள் சொல்லியிருக்கா. இந்தக் காலத்தில் அந்த ஆறு கர்மாக்கள் ஏழாக ஆயிட்டதுன்னுகூடச் சொல்லலாம். சினிமாப் படம் பார்க்கிறதுதான் அந்த ஏழாவது. சிலபேர் தினே தினே பார்க்கிறான். சில பேர் வாரே வாரே பார்க்கறான்.

இந்த 'நீலகிரி எக்ஸ்பிரஸ்' இருக்கே! அது ஒரு வேகமான படமாகவே இருக்கு. ரயில் ஓடிண்டே இருக்கு. மோட்டார் ஓடறது. மனுஷாளும் ஓடிண்டே இருக்கா. இவாளுக்கெல்லாம் பின்னாலே கதை கூட அப்பப்போ ஓடறது.

துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனார்த்தம்ங்கற தர்மத்தின் அடிப்படையிலேதான்— கதையை எழுதியிருக்காள் 'சோ'ன்னு சொல்லப்பட்டவாள். தான் எழுதிக் கொடுத்த கதைக்குப் பாதுகாப்பு அளிக்கிறது போல அவாளும் இந்தப் படத்திலே நடிக்கிறான். அது மாத்திரமில்லே! சம்பிரதாயப் பிரகாரம் வேஷ்டி கட்டிண்டே அநேகமாகப் படம் முழுகம் வந்துட்டுப் போயிடறான். மற்றவா எல்லாருமே துரைமார்கள் போலே கால் சிராயோடேயும், கோட்டோடேயும் வர போது இவான் மாத்திரம் இது நம்ப தேசத்திலே நடக்கிற கதைங்கறதை அடிக்கடி நமக்கு ஞாபகப்படுத்தறான்.

இல்லாதபோனாலும் அசோகன்னு சொல்லபட்டவாள் மொட்டைத் தலையோடேயும் ஒரு கண் மறைப்போடேயும் பூதாகாரமாக வந்து போயிண்டு இருக்கிறதைப் பார்த்தால் இது அமெரிக்காள் ஹாலிவுட் க்ஷேத்திரத்திலே எடுத்த படமோ என்ற சம்சயம் ஏற்படலாம். சமீபத்தில் பட்டிணத்துக் கொட்டகை ஒன்றில் ஓடிய 'காலா நாஸ்டிரா'ங்கற இங்கிலீஷ் படத்திலே வால்டர் பிட்ஜியன் எங்கற நடிகாள் இப்படித்தான் மழ மழன்ன தலையுடன் வந்துட்டுப் போனான். ஆனால் அவாள் இஸ்ரேல் நாட்டுத் தளபதி மோஷி தயான் மாதிரி ஒரு கண் மறைப்பை மாட்டிக்கலே. இந்த அசோகாள் மாட்டிண்டு இருக்கான். அவ்வளவுதான்.

அர்ஜுனன் என்றவுடனே அவன் வில் வித்தைத் திறமையும் நம்ப நினைவுக்கு வறது

போலே ஜெய்சங்கர் என்ற பேரோடே அடி உதை வித்தையும் இணைஞ்ச போறது. இந்தக் கதையிலே அவாளுக்கு இந்த அம்சத்திலே கொடுக்கல் வாங்கலுக்கு நிறையவே சந்தர்ப்பம் கொடுத்திருக்கா. இவாளும் நன்றாகவே நடித்திருக்காள்.

கோல்டு ஃபிங்கர்ங்கற இங்கிலீஷ் படத்திலே வர ஒரு முரட்டு பயில்வான்வாள் மாதிரி இந்தப் படத்திலேயும் ஒரு ஆத்மாவைக் காண்பிக்கிறா. பரவாயில்லை. அதிலே அவான் எலக்ட்ரிக் வொயர் பட்டு முக்தியடைகிறான். இதிலே பெட்ரோல் தகனத்திலே முக்தி கிடைக்கிறது.

தசகண்ட ராவணனோட லங்காபுரிக்கு ஆஞ்சநேய ஸ்வாமி அக்கினி இட்டதுபோல, ராவணன்கிற பேரோடே படத்தில் வரும் 'சோ' துஷ்டாளோட முதுகுகளிலே பெட்ரோல் உதவி கொண்டு அக்கினி தானம் செய்கிறான்.

ஆலயத்தில் ஏற்றியிருந்த நெய் தீபத்திலுள்ள நெய்யைப் புசிக்கக் கருதி ஓர் எலி அதனருகில் செல்ல அதன் முயற்சி இன்றியே திரி மீது அதன் கால் பட்டு அணைந்து போகும் நிலையில் உள்ள தீபம் எரிந்ததால் அது மகாபலி சக்கரவர்த்தியானதுன்னு வேதாரண்ய ஸ்தல புராணத்திலே சொல்றான். எலி போலே ஒளிந்து கொண்ட இடத்திலே 'சோ' பெட்ரோல் டின்களைப் பார்த்ததாலே மகா பவிஷ்டர்களான துஷ்டக் கும்பலை சம்ஹரிக்க உதவி செய்யும் புண்ணியத்தை அப்யாசிக்கிறான்.

ஹாஸ்ய நடிகான்னு அவான் என்னதான் வீராவேச புருஷனா யிருந்தாலும் கொஞ்சப் பொழுதாவது ஸ்திரீ வேஷம் ஏற்க வேண்டும் என்று ஒரு சினிமா லோக ஏற்பாடு. ''டு காச் எ ஸ்பை'' என்கிற இங்கிலீஷ் படத்திலே வர ஒரு கட்டத்தை இந்தப் படத்தில் ஆவாஹனம் செய்வது மூலம் 'சோ' கொஞ்ச நாழிகை ஸ்திரீயாகப் பரிணமித்து நாட்டியக் கலையையும் ஒரு கை பார்க்கிறான். அன்றைக்குக் கோகுல கிருஷ்ணன் காளிங்க நர்த்தனம் செய்தபோது பூவுலகமே ஆடினதாம். இப்போ கொட்டகையே ஆடறது.

அசல் ஸ்திரீ பாத்திரங்களைப் பற்றி ஒன்றும் விசேஷமாக விஞ்ஞாபிக்க இடம் இல்லை. வெவ்வேறு ஸ்திரீகள்னு நாம் நினைக்கண்டு இருக்கது தவறுங்கற கட்டத்தை நன்றாக வெளிப்படுத்தறா.



## கோலும் கோபமும்

சில கோபக்காரர்கள், கோபம் வந்து விட்டால் கையில் எது கிடைத்ததோ அதைக் கொண்டு எதிராளியை அடித்து விடுவதைப் பார்த்திருக்கிறோம்.

சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற நான்காவது அகில இந்திய மது விலக்கு மகாநாட்டில் ஒரு ரஸமான நிகழ்ச்சி.



கொஞ்ச காலமாகப் பொதுக் கூட்டங்களில் உட்கார்ந்தே பேசி வரும் ராஜாஜி அன்று நின்று கொண்டு பேசினார்.

அவருக்குப்பின் பேசிய கிருபளானி, ''என்னால் நின்று கொண்டு பேச இயலாது! ராஜாஜி பேசினாரே என்று நீங்கள் கேட்கலாம். அவர் கோல் உபயோகப்படுத்துகிறார் — நடப்பதற்கும், நிற்பதற்கும். அதனால் அவரால் நின்று பேச சாத்தியமாகிறது. 'அதையே நீயும் ஏன் செய்யக் கூடாது? நீயும் ஏன் கோல் உபயோகிக்கலாகாது?' என்று நீங்கள் கேட்கலாம். நான் ரொம்பவும் கோபக்காரனாயிற்றே. அதனால் கோல் உபயோகப்படுத்தப் பயப்படுகிறேன்!'' என்றார்.

சுகே துக்கே ஸமே க்ருத்வா லாபா லாபௌ
ஜயா ஜயௌ
ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபம்
அவாப்ஸ்யஸி

ன்னு கீதையிலே பரமாத்மா சொல்றதை இந்தப் படத் தயாரிப்பாளர்கள் நன்றாகக் கடைப்பிடித்திருக்கான்னுதான் சொல்லணும். சுகத்தையும், துக்கத்தையும் லாபத்தையும் நஷ்டத்தையும், வெற்றியையும், தோல்வியையும் சமமாகக் கருதியே இந்த முயற்சியிலே ஈடுபட்டிருக்கா. பகவான் அவாளுக்கு சம்பூர்ண தனப் பிராப்தியைக் கொடுக்கணும்.

திருமலை — மகாலிங்கம் என்ற இரட்டையாள் இந்தப் படத்தை டைரக்ட் செய்திருக்கா. திவ்யமாகச் செய்திருக்கான்னு சொல்லலாம். படத்திலே வர ஒரு நாட்டியக் காட்சியையும் கலையம்சத்தோடே பரவசப் படற அளவுக்குக் காட்டறா. அந்த ஒரு இடத்திலே சங்கீதம் கேட்கும்படி ரம்யமாக இருக்கு.

அயிகிரி நந்தினி நந்தித மேதினி......

**— கோமதி சுவாமிநாதன்**

அடுத்த இதழில்: **திரு காமராஜ நாடார் குஸ்திப் பந்தயத்துக்குத் தலைமை தாங்குகிறார்!**

# வகைக்கு ஒன்று மொத்தம் ஐந்து !

[ஹாஸ்யம், சரித்திரம், மர்மம், நையாண்டி, சோகம் என வகைக்கு ஒன்றாக மொத்தம் ஐந்து நாடகங்களைத் திருச்சி வானொலி நிலையம் நாடக விழாவின்போது ஒலிபரப்பியது.]





மேலே : விஜயவிஜயம்

இடதுபுறம் : வாழ்வெனும் பயணம்

வலதுபக்கம் : தொடர்கதை

கீழே : இன்பம் எங்கே ?



## விஜய விஜயம்

''விஜி ராஜா! வாடா!'' — அருமைக் குமாரி விஜயத்தை இப்படித்தான் அழைப்பார்கள் அவளின் பெற்றோர்கள்! பிள்ளைக் குழந்தை இல்லையே ? அந்தக் குறையை மறக்க இந்த வழியைக் கடைப்பிடித்தார்கள். அது மட்டுமா ? விஜயத்தை ஆண் மகனைப் போலவே, சர்வ சுதந்திரமும் அளித்து வளர்த்து வந்தனர். தான் ஒரு பெண் என்ற நினைவே அவளுக்கு இல்லாமல் போய் விட்டது !

இருந்தாலும், மகளுக்கு உரிய வயதில் ஒரு நல்ல கணவனைத் தேடியளித்து அவளது வாழ்வு மலரச் செய்ய வேண்டிய கடமையைப் பெற்றோர் மறந்துவிடவில்லை. விஜி ராஜாவுக்குப் பொருத்தமான ஒரு மாப்பிள்ளை கிடைக்காமலா போய் விடுவான் ? பாலம்மா அவளுக்காகவே பிறந்தவனாயிற்றே !

'பாலம்மா ஆண் மகன்தான்! அவனுடைய பெற்றோர்களுக்குப் பெண் குழந்தை இல்லாத குறையைத் தீர்க்க பாலசந்தர் 'பாலா வாகி, 'பாலம்மா'வும் ஆகிவிட்டான். பிள்ளைக் கலி தீர்க்க வந்த குமாரி விஜிராஜாவுக்கும், பெண்கலி தீர்க்கவந்த திருவளர்செல்வன் பாலம்மாவுக்கும் பிரும்மா ஏற்கனவேயே முடிச்சுப் போட்டு வைத்திருக்கிறானே !

(மாப்)பிள்ளை பார்க்கும் படலம் (பெண் பார்க்கும் கர்நாடக வழக்கத்துக்கு விஜி ராஜாவோ அவளது பெற்றோர்களோ இணங்குவார்களா?) சற்று மிகை என்றாலும் நல்ல நகைச்சுவையோடு அமைந்திருந்தது. பாலா (சோ) 'அம்ப நீ இரங்காயெனில்' பாடியது பிரமாதம்! நடனம், 'தாலாட்டு', சமையல் முதலிய கலைகளிலும் தான் கைதேர்ந்தவன் என்பதை வெளிப்படுத்தி, தன்னைப் 'பிள்ளை பார்க்க' வந்திருக்கும் விஜி (மனோரமா)யின் உள்ளத்தில் இடம் பெறுகிறான் பாலா! விஜியும் அவள் பெற்றோர்களும் பாலாவுக்கு ஒரு பரீட்சையே வைத்து விடுகிறார்கள். பையனின் படிப்பு என்ன, இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறான் என்ற கேள்விகளுக்கு, ''பி.காம் (B Com) படித்து விட்டு, பீ காம் (Be.Calm)ன்னு வீட்டிலேயே உட்கார்ந்திருக்கேன்'' என்று பாலா அடக்க ஒடுக்கமாகப் பதில் சொல்வது எந்த உம்மணா மூஞ்சியையும் சிரிக்க வைக்கும். திருமணம் நிகழ்ந்தபின் கணவன் பாலா, மனைவி விஜிக்குத் திருப்பள்ளி எழுச்சி பாடுவது, பெட் காப்பி கொடுப்பது — இதெல்லாம் கேட்டுச் சிரிக்காமலிருக்க முடியுமா ? இறுதியில் விஜிராஜா அடுத்த வீட்டுக்காரரின் உதவியால் சீர்திருந்தி விஜிம்மா ஆகிறாள். பாலசந்தரும் ஆண்மையை வெளிக் காட்டுகிறான். என். ராகவன் எழுதிய இந்நாடகம் முழுவதும் நல்ல நகைச்சுவை வெளிப்படுகிறது. புத்தாண்டு (13—4—68) தினத்தன்று ஒலிபரப்பான இந்த நாடகத்தைச் சென்னை வானொலி நிலையம் ஏனோ அஞ்சல் செய்யத் தவறி விட்டது! ஐரோப்பிய சங்கீதத்தை இந்த ஒரு நாள் நிறுத்திவிட்டு இந்த நல்ல

நகைச்சுவை நாடகத்தை அஞ்சல் செய்திருந்தால் என்ன குடிமுழுகிப் போயிருக்கும்?

## வாழ்வெனும் பயணம்

**ப**ல்லவ மன்னன் நந்திவர்மன் தன்னோடு போரிடத் துணிந்த அமோகவர்ஷனை அமர்க்களத்தில் முறியடித்து, அவன் மகள் சங்கையை மணக்கும் நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு உருவான வரலாற்று நாடகம் சிறப்பாக அமைந்திருந்தது. இந் நாடகத்தில் பங்கு பற்றிய அனைவருமே நன்றாகப் (ந)படித்தார்கள் என்று கூற வேண்டும். வானொலி நாடகங்களின் வெற்றி தோல்வி படிப்பதில்தானே அடங்கியுள்ளது. நாடகத்தின் நடுவில் புகுத்தப்பட்டுள்ள ஒரு பாட்டு தேவையில்லை என்றே தோன்றுகிறது. விமலாரமணி எழுதியுள்ள இந்நாடகத்தில் உரையாடல்கள் விறுவிறுப்பாக அமைந்திருந்தன. சரித்திர நாடகங்களில் நாம் சகஜமாகக் கேட்கும் அட்டகாசச் சிரிப்பு தலைகாட்டாததைப் பாராட்ட வேண்டும்.

## குல விளக்கு

**கீ**தாவின் காதலன் முத்தையன் நல்லவன் தான். ஆனால், சந்தர்ப்பவசத்தால் அவன் மீது ஒரு கொலைக் குற்றம் சுமத்தப்படுகிறது. தன் தங்கையின் காதலனுக்காக வழக்காடும் பொருட்டு பப்ளிக் பிராஸிக்யூட்டர் வேலையை ராஜிநாமா செய்கிறான் அருண். வழக்கினை விசாரிப்பவர் ஒத்திப் போடும் தருணத்தில் I adjourn the case to... என்று ஆங்கிலத்தில் கூறுகிறார். தமிழ் மட்டும் தெரிந்தவர்களுக்குப் புரிந்திருக்குமா என்று கேட்கிறீர்களா? வழக்கினை செஷன்ஸ் கோர்ட்டுக்கு மாற்றும் போது, 7, 8 ஆங்கில வாக்கியங்களைச் சரமாரியாகப் பொழிந்து தள்ளுகிறாரே — அது மட்டும் புரிந்திருக்கப் போகிறதா? சுப்ரீம் கோர்ட்டில் வழக்கு முத்தையனுக்கு எதிராக முடிந்ததும், தன் கழுத்தில் மாங்கல்யத்தைக் கட்டும்படி கீதா முத்தையனிடம் சிறையில் கேட்கும் கட்டம் உருக்கமாக அமைந்திருந்தது. கீதாவாக நடித்த கே. ஆர். ராஜாமணியின் நடிப்பு பிரமாதம். 'முழக்கம் பாணு' எழுதிய இந்நாடகத்தில் சுவையான கதைப் போக்கும் விறுவிறுப்பான உரையாடல்களும் பாராட்டுக்குரியவை.



## இன்பம் எங்கே?

**து**ன்பத்தின் எல்லையில்தான் இன்பம்; தியாகம் செய்வதன் மூலம் பெறக் கூடிய இன்பம் இணையற்றது என்ற கருத்தமைந்த எஸ். டி. சுந்தரம் எழுதிய நாடகத்தில் நகைச்சுவையும் நையாண்டியும் போட்டி போட்டு ரசிகர்களை மகிழ்வித்தன. கனவான்கள் சங்கத்தின் தலைவர் உண்மையான கலாரசனையற்றவர். கலைவாணி என்ற நாட்டிய ராணிக்குப் பாராட்டு விழா நடத்த முன் வரும் சங்கத் தலைவர் சுயநலக்காரர்; தற்பெருமை மிக்கவர். அவருடைய பாசாங்குகளைக் கலைவாணி புரிந்து கொண்டு விடுகிறாள். சங்கத் தலைவரின் போலித்தனத்தை அவளே கண்டிக்கிறாள். இறுதியில் அவர் வேடம் கலைகிறது. கலைவாணி போலீஸ் இன்ஸ்பெக்டரின் தங்கை என்ற உண்மையும் வெளிப்படுகிறது. கனவான்கள் சங்கத் தலைவர், 'என் பெயரே போய்விடும்போல் இருக்கிறதே?' என்று கூறும் போது, காரியதரிசி பளிச்சென்று, 'போனால் போகட்டும்; வேறே புனைபெயர் வைச்சுக்கலாம்!' என்று பதிலளிப்பதும், 'எறும்பு பட்டினி கிடந்து யானைப் பசியைத் தீர்க்க முடியாது' என்று கலைவாணி கவிஞரிடம் எடுத்துரைப்பதும் உரையாடல்களின் சிறப்புக்கு எடுத்துக்காட்டு. 'சூரியன் கண் மூடினால்' என்ற நடனப் பாட்டின் மெட்டும் இசையும் மனத்துக்கு உற்சாகம் அளிக்கும் வகையில் அமைந்திருந்தன. நாடகத்தை நன்கு தயாரித்து அளித்த கோவிந்தராஜ் பாராட்டுக்குரியவர்.

## தொடர் கதை

**க**லைஞர் மு. கருணாநிதியின் ஒரு சோகச் சித்திரம். சிறைச்சாலையில் தொடங்குகிறது முதல் காட்சி. நாடகம் முடிவதற்குள் ஒரு கொலை, இரு தற்கொலைகள் நடைபெறுகின்றன. காதலின் விளைவாகப் பலர் துன்பத்தில் உழல நேர்ந்த போதிலும் காதலின் காந்த சக்தி காரணமாக அது தலைமுறை தலைமுறையாக ஒரு முடிவில்லாத் தொடர்கதையாக இருந்து வருகிறது என்பது நாடகத்தின் மையக் கருத்து. ஏழை சந்தனம் பெரிய இடத்துப் பெண் குமுதாவைக் காதலிக்கிறான். எதிர்ப்பு இல்லாமலிருக்குமா? அப்புறம் கதை வளரக் கேட்பானேன்? இத்துன்பியல் நாடகம் நல்ல கட்டுக்கோப்புடன் அமைந்துள்ளது. சந்தனம் பாத்திரத்தை ஏற்றவர் தம் பாகத்தை மிகச் சிறப்பாகச் செய்தார். ஒரு மணி நேரம் போனதே தெரியவில்லை.

ஃ ஃ ஃ

பல்வேறு சுவைகளுடன்கூடிய இவ்வைந்து நாடகங்களையும் நல்ல முறையிலே அமைத்து ஒலிபரப்பி ரசிகர்களின் பாராட்டினைப் பெற்றுள்ளது திருச்சி வானொலி நிலையம்.

''**பாணன்**''

# மகாபாரதம்

ராஜாஜி

"ராஜனே! கவறாட்டம் நல்ல விஷயமல்ல. பந்தய ஆட்டங்களில் ஜெயிப்பது பராக்கிரமத்தோடு சேராது. அசிதரும், தேவலரும் இன்னும் லௌகிக விஷயங்களில் அநுபவம் பெற்ற முனிவர்கள் பலரும் சூதாட்டம் கூடாது; அது மோசத்தோடு சேர்ந்தது என்று சொல்லி யிருக்கிறார்கள். யுத்தத்தில் ஜெயிப்பதே க்ஷத்திரியர்களுக்கு யோக்கியமான முறை என்று சொல்லியிருக்கிறார்கள். இது உனக்குத் தெரியாதது அல்ல!" என்றான் யுதிஷ்டிரன்.

ஒரு பக்கம் பழக்கத்தினால் தூண்டப்பட்டு யுதிஷ்டிரன் ஆடவும் ஆசைப்பட்டான்; மற்றொருபுறம் அது கூடாது என்கிற விவேகமும் அவனைத் தடுத்துக் கொண்டுதான் இருந்தது; சகுனியுடன் வாதம் செய்யும் சாக்காகத் தன் உள்ளத்தில் நடைபெற்ற மனக் குழப்பத்தை வெளியிட்டுக் கொண்டான். கூர்மையான மூளை படைத்த சகுனி இதை உணர்ந்து, மறுபடியும் சொன்னான்.

"மோசமாவது என்ன? யுத்தமாவது என்ன? வேதம் படித்தவர்கள் ஒருவரோடு ஒருவர் போட்டி போடவில்லையா? படித்தவன் படிக்காதவனை ஜெயிக்கிறான். அது மோசம் என்று யாராவது சொல்கிறார்களா? ஆயுதத் தேர்ச்சி பெற்றவன் தேர்ச்சி பெறாதவனை யுதத்தில் தோற்கடிக்கிறான். அதுமட்டும் தர்மமா? தேக பலம் உள்ளவன் தேக பலம் இல்லாதவனை ஜெயிக்கிறான்; அதுவும் மோசம்தானே? எல்லாச் செய்கைகளிலும் பயிற்சி அடைந்தவன் பயிற்சி யடையாதவனைத் தோற்கடிக்கிறான். இதில் மோசம் என்ன, தர்மம் என்ன? பாய்ச்சிகை ஆட்டத்திலும் ஆடத் தெரிந்தவன் ஜெயிக்கிறான்; தெரியா





தவன் தோல்வி யடைகிறான். இதை மோசம் என்று எவ்வாறு சொல்லலாம்? உனக்குப் பயமிருந்தால் ஆட வேண்டாம். ஆனால் தர்மத்தின் பேரில் சாக்குச் சொல்ல வேண்டாம்'' என்றான்.

''சரி; யார் என்னுடன் ஆட வருகிறார்கள்?'' என்றான் யுதிஷ்டிரன்.

துரியோதனன், ''பணயம் வைக்க நான் தனமும் ரத்தினமும் தருவேன். எனக்காக என் மாமா சகுனி ஆடுவார்'' என்றான்.

''ஒருவனுக்காக மற்றொருவன் ஆடுவது சாதாரண முறையல்ல என்பது என் அபிப்பிராயம்'' என்றான் யுதிஷ்டிரன்.

''ஓ! வேறு சாக்கு எடுத்தாயோ!'' என்று சகுனி ஏளனம் செய்ய ஆரம்பித்தான்.

ஆணவம் தலையெடுத்தது.

''சரி, ஆடுகிறேன்'' என்றான் யுதிஷ்டிரன்.



யுதிஷ்டிரன் துரியோதனனை ஆட்டத்தில் தோற்கடிக்கலாம் என்று எண்ணியிருந்தான். சகுனியின் சாமர்த்தியத்தை அறிந்தவனாதலால் தயங்கினான்.

மண்டபம் நிறையக் கூட்டம். சபையில் துரோணரும், கிருபரும், பீஷ்மரும், விதுரனும் திருதராஷ்டிரனும் இருந்தார்கள். கலகத்துக்குக் காரணமான சூதாட்டம் நடைபெறுகிறது என்று இவர்களுக்குத் தெரிந்திருந்தும் தடுக்க முடியாமல் அதிருப்தியோடு உட்கார்ந்திருந்தார்கள். மண்டபத்தில் கூடியிருந்த ராஜகுமாரர்கள் மிக்க உற்சாகத்தோடு ஆட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

முதலில் ரத்தினங்கள் பந்தயம் வைக்கப்பட்டன. பிறகு பொன்னும் பொக்கிஷங்களும் வைக்கப்பட்டன. பிறகு தேர்களும் குதிரைகளும் வைக்கப்பட்டன. இவற்றை இழந்த பின் யுதிஷ்டிரன் தன் வேலைக்காரர்களைப் பந்தயம் வைத்து இழந்தான். பிறகு தனக்குள்ள யானைகளையும் சேனைகளையும் பந்தயமாக வைத்து அவற்றையும் இழந்தான். சகுனியின் பாய்ச்சிகை ஒவ்வொரு வீச்சிலும் அவன் சொன்னபடி நடந்து கொண்டது.

பசுக்கள், ஆடுகள், நகரங்கள், தேசங்கள், பிரஜைகள் எல்லாவற்றையும் யுதிஷ்டிரன் இழந்தான். ஆட்டத்தை நிறுத்தவில்லை. தம்பிகளின் உடல் மேலிருந்த ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் இழந்தான்.

''வேறு ஏதாவது உண்டா?'' என்றான் சகுனி.



''இதோ அழகிய சியாமள நிறங் கொண்ட நகுலன் இருக்கிறான். இவனும் எனக்கு ஒரு பொருள் ஆவான். அவனைப் பந்தயம் வைக்கிறேன்'' என்றான் யுதிஷ்டிரன்.

''அப்படியா? இதோ உன் பிரியமான ராஜகுமாரன் எங்கள் வசமானான்'' என்று சொல்லிப் பாய்ச்சிகையை விசினான். சொல்லியபடியே ஜெயித்தான் சகுனி. சபை திடுக்கிட்டது.

''இதோ என் தம்பி சகாதேவன். கல்வியின் கரையைக் கண்டு புகழ் பெற்றவன். இவனைப் பந்தயமாக வைப்பது தவறு. ஆயினும் வைக்கிறேன். ஆடுவாயாக!'' என்றான் யுதிஷ்டிரன்.

''ஆடினேன், ஜெயித்தேன்'' என்று சொல்லிக் கொண்டே பாய்ச்சிகையை விசினான் சகுனி. தம்பி சகாதேவனையும் இழந்தான் தருமன்.

ஒருவேளை இத்துடன் யுதிஷ்டிரன் ஆட்டத்தை நிறுத்திவிடுவானோ என்று அந்தத் துராத்மா சகுனி, ''உன் மதிப்பில் பீமனும் அர்ச்சுனனும் மாத்ரீ புத்திரர்களைவிட விலை அதிகம் போலும்! அவர்களை வைத்து ஆட மாட்டாயல்லவா?'' என்று குத்திச் சொன்னான்.

''மூடனே! எங்களைப் பிரித்துவிடப் பார்க்கிறாயா? அதர்மத்தில் வாழ்பவனாகிய உனக்கு எங்களுக்குள் இருக்கும் தரும நிலை எங்கே தெரியப் போகிறது?' என்று கூறி யுதிஷ்டிரன், ''யுத்தத்தில் எங்களைக் கரை சேர்க்கும் நாவாயைப் போன்றவன், ஒப்பற்ற பராக்கிரமம் படைத்தவன். எப்போதும் வெற்றிக்கு ஸ்தானமானவன். இந்த அருச்சுனனையும் பந்தயமாக வைக்கிறேன். ஆடு!'' என்றான்.

''இதோ ஆடுகிறேன்'' என்று சொல்லிவிட்டுச் சகுனி ஆடினான். யுதிஷ்டிரன் அருச்சுனனையும் இழந்தான்.

வரை கடந்து போன துர்திர்ஷ்டப் பிரவாகம் தரும புத்திரனை வசமின்றிச் செய்து அவனை இழுத்துச் சென்றது. கண்களில் நீர் கலங்க, ''அரசனே! யுத்தத்தில் எங்களுக்குத் தலைவன். அசுரர்களுக்குப் பயத்தைத் தரும் வச்சிராயுதம் எடுத்த இந்திரனைப் போன்றவன். அவமதிப்பை ஒரு போதும் பொறுாதவன். உலகத்தில் இவனுக்குச் சமமான தேக வன்மை படைத்தவன் எவனுமில்லை. இந்தப் பீமனைப் பந்தயமாக வைக்கிறேன்'' என்று சொல்லி வாயுபுத்திரனையும் பந்தயமாக வைத்து ஆடினான். மறுபடியும் யுதிஷ்டிரன் தோற்றான்.

''இன்னும் ஏதாவது பொருள் உண்டா?'' என்றான் சகுனி.

''ஆம். இருக்கிறது. இதோ! நீ ஜெயித்தாயானால் நானும் உனக்கு அடிமையாக இருப்பேன்'' என்றான் தரும புத்திரன்.

''இதோ ஜெயித்தேன்!'' என்று சொல்லிக் கொண்டே யுதிஷ்டிரனையும் பெற்று விட்டான். அதன் பிறகு சகுனி சபையில் நின்று பாண்டுபுத்திரர்கள் ஐவரையும் ஒவ்வொருவராகப் பெயர் சொல்லி அறிவித்து, தனக்கு நியாயப்படி அடிமையானான் என்று சபையோருக்கு வெகு ஆரவாரத்துடன் பிரகடனம் செய்தான்.

அவ்வாறு சபையோரைக் கலங்கச் செய்த பின், சகுனி யுதிஷ்டிரனைப் பார்த்து, ''உன்னிடம் இழக்காத பொருள் ஒன்று இன்னும் இருக்கிறது. அதைப் பந்தயம் வைத்து மறுபடியும் உன்னை நீ மீட்டுக் கொள்ளலாம். மனைவி பாஞ்சாலியை வைத்து ஏன் ஆடலாகாது?'' என்றான்.

''அவளையும் வைத்தேன்'' என்று யுதிஷ்டிரன் சொல்லி விட்டான். சொல்லி விட்டுத் தன்னையும் அறியாமல் கதறினான்.

சபையில் விருத்தர்கள் இருந்த பக்கத்தில் சத்தம் கிளம்பிற்று. அதன் மேல் ''சீ! சீ'' என்று எல்லாப் பக்கத்திலும் பெரும் கலக்கம் உண்டாயிற்று. சிலர் கண்ணீர் விட்டார்கள். சிலருடைய உடலில் வேர்வை கொட்டியது.

துரியோதனனும் தம்பிகளும் கர்ணனும் சந்தோஷ ஆரவாரம் செய்தார்கள். திருதராஷ்டிரன் மகன் யுயுத்ஸு என்பவன் மட்டும் தலைகுனிந்து பெருமூச்சு விட்டான். சகுனியும் காய்களை வீசி ''ஜெயித்தேன் பாருங்கள்!'' என்றான்.

உடனே, துரியோதனன் விதுரனைப் பார்த்து, ''போய்ப் பாண்டவர்களுக்குப் பிரியமான திரௌபதியை அழைத்து வாரும். எங்கள் வீட்டைக் குப்பை கூட்டிச் சுத்தப்படுத்த வேண்டும். சீக்கிரம் வரட்டும்'' என்றான்.

''மூடனே! யமன் வீட்டுக்குப் போகாதே! கயிற்றினால் கட்டப்பட்டுப் படுகுழியில் தொங்குகிறாய். அது தெரியாமல் மூடனைப் போலவே பேசுகிறாய். உன் பதவிக்குத் தகாத பேச்சுக்கள் உன் வாயிலிருந்து வெளியாயின'' என்று விதுரன் துரியோதனனைக் கடிந்து விட்டுச் சபையோரைப் பார்த்து, ''தர்மபுத்திரன் தன்னுடைய சுதந்திரத்தை இழந்த பின் பாஞ்சாலியைப் பந்தயம் வைக்க அவனுக்கு உரிமை இல்லை. கௌரவ

களின் முடிவு நெருங்கி விட்டது. நண்பருடைய சொற்களை மதிக்காமல் திருதராஷ்டிரன் புத்திரர்கள் நரகத்துக்கு வழி தேடிக் கொள்ளுகிறார்கள்'' என்றான்.

துரியோதனன் விதுரன் சொன்னதைக் கேட்டுச் சினங் கொண்டு தன் தேரோட்டி பிரதிகாமியை அழைத்து. ''இந்த விதுரர் எங்களிடம் அசூயை கொண்டவர். பாண்டவர்களைக் கண்டு பயந்தவர். உனக்கு அவ்வாறான பயமில்லையே? நீ போய்த் திரௌபதியை உடனே கூட்டிவா!'' என்றான்.

## 26. திரௌபதியின் துயரம்

எஜமானன் கட்டளைப்படி தேரோட்டி பிரதிகாமி திரௌபதியிடம் சென்றான்.

''அம்மணி, துருபத புத்திரியே! யுதிஷ்டிரர் சூதாட்டம் என்னும் மயக்கத்தில் விழுந்து சிக்கிக் கொண்டு உன்னைத் துரியோதனனுக்கு இழந்து விட்டார். திருதராஷ்டிரன் வீட்டில் வேலை செய்வதற்காக உன்னை அழைத்துப்போக வந்திருக்கிறேன். இது அவர்களுடைய கட்டளை'' என்றான்.

ராஜசூய யாகம் செய்து ராஜாதி ராஜனாகப் பட்டாபிஷேகம் பெற்றவனுடைய மகிஷியான திரௌபதி இந்த விசித்திரமான பேச்சைக் கேட்டுத் திகைத்துப் போனாள். ''பிரதிகாமி! என்ன சொல் சொன்னாய்? எந்த ராஜபுத்திரன் தன் மனைவியை ஆட்டத்தில் பந்தயம் வைப்பான்? பந்தயம் வைக்க வேறு ஒரு பொருளும் இருக்கவில்லையா?'' என்றாள்.

''ஆமாம் தாயே! வேறு பொருள் இல்லாதபடியால்தான் உன்னை வைத்து ஆடினார்'' என்று யுதிஷ்டிரன் பொருளெல்லாம் இழந்ததும், தம்பிகளை இழந்ததும், பிறகு தன்னையும் மனைவியையும் பந்தயமாக வைத்ததும் ஆகிய விவரங்கள் முழுவதும் சொன்னான்.

பிரதிகாமி சொன்ன விருத்தாந்தம் இதயத்தை உடைத்து உயிரைக் கொல்லும் தன்மையாக இருந்த போதிலும் க்ஷத்திரிய ஸ்திரீயானபடியால் விரைவில் உள்ளத்தில் தைரியம் செய்து கொண்டாள். கண்களில் கோபாக்னி ஜொலித்தவளாக, ''ஓ தேரோட்டியே! திரும்பிப் போ. போய்ச் சூதாடியவரைக் கேள். நீர் முதலில் உம்மைத் தோற்றீரா அல்லது மனைவியைத் தோற்றீரா என்று கேள். சபையோர் முன்னிலையில் இந்தக் கேள்வியைக் கேட்டு விடைபெற்றுக் கொண்டு பிறகு என்னை அழைத்துப் போகலாம்'' என்றாள்.

பிரதிகாமி அவ்வாறே போய்ச் சபையின் முன் தர்ம புத்திரனைப் பார்த்துத் திரௌபதி சொன்னபடி கேட்டான்.

யுதிஷ்டிரர் உயிரிழந்த பிணம்போல் காணப்பட்டார். மறுமொழி சொல்லாமல் நின்றார்.

அதன்மேல் துரியோதனன் பிரதிகாமியைப் பார்த்து, ''பாஞ்சாலியே இவ்விடம் வந்து தன் புருஷனை இந்தக் கேள்வி கேட்கட்டும். போய்த் திரௌபதியை அழைத்து வா!'' என்றான்.

பிரதிகாமி மறுபடியும் திரௌபதியிடம் சென்று, ''அரச குமாரியே! அற்பனான துரியோதனன் உன்னைச் சபைக்கு வரச் சொல்லுகிறான். நீயே நேரில் வந்து கேள்வி கேட்கலாம் என்று கட்டளையிடுகிறான்'' என்று வணக்கத்துடன் சொன்னான்.

திரௌபதி மறுபடியும் ''இல்லை. திரும்பிப் போய்ச் சபையோரை நான் கேட்ட கேள்வியைக் கேள். என் பிரச்னைக்கு அவர்களாவது பதில் சொல்லட்டும்'' என்றாள்.

பிரதிகாமி போய்த் திரௌபதி சொன்னதைச் சபையோருக்குத் தெரியப்படுத்தினான்.

துரியோதனன் கோபம் கொண்டு, தம்பி துச்சாதனனைப் பார்த்து ''இந்தத் தேரோட்டி பெரும் மடையன். பீமனைக் கண்டு பயப்படுகிறான். நீ போய் அவளை இழுத்து வா!'' என்று உத்தரவிட்டான்.

இதைக் கேட்டதும் துச்சாதனன் மகிழ்ச்சியடைந்து, துரிதமாகவே சென்றான். திரௌபதி இருக்குமிடம் சென்று, ''வா, வா, வீணில் தாமதம் செய்ய வேண்டாம்! நீ ஜெயிக்கப்பட்டாய்! வெட்கம் ஏன்? அழகியே! கௌரவர்களைச் சேர். தருமமாக அடையப்பட்டிருக்கிறாய். சபைக்கு வா!'' என்று துராத்மாவான துச்சாதனன் சொன்னான். சொன்னதோடு அவளைப் பிடித்து இழுக்கப் போனான்.

பாஞ்சாலி எழுந்து துயரம் தாங்க முடியாமல் கதறிக் கொண்டு திருதராஷ்டிரனுடைய அந்தப்புரத்துக்குள் சென்றாள். துச்சாதனன் அவளைத் துரத்திக் கொண்டு போய் அவள் தலைமயிரைப் பிடித்து இழுத்து அலங்கோலம் செய்து சபைக்கு அவளைப் பலாத்காரமாக இழுத்துக் கொண்டு வந்தான்.

(தொடரும்)

அனுபவம் புதுமை



அமெரிக்காவின் மிகப் பெரிய நகரமான லாஸ்ஏஞ்ஜெலஸ்ஸின் சாலைகளில் மனித நடமாட்டத்தையே காண முடியாது என்றால் அது முற்றிலும் உண்மை. லாஸ்ஏஞ்ஜலஸ் நகருக்குள்ளேயே கார்கள் மிக வேகமாகச் செல்வதற்குரிய ''ஸ்பேர்'' நெடுஞ்சாலைகள் உள்ளன. இந்நெடுஞ்சாலைகளில் அறுபது, எண்பது மைல் வேகத்தில் கார்கள் பறக்கும். சாலை ஓரங்களில்கூட உயிர்விடத் துணிந்தவர்களன்றி வேறு யாரும் நடக்க முடியாது; நடப்பதுமில்லை. தெருக் கோடிக் கடைக்குப் போவதானாலும் காரை எடுத்துக் கொண்டுதான் கிளம்புவார்கள்

அமெரிக்காவின் உள்ள பல சாலைகளில் நடப்பது சட்டப்படியே குற்றமாகும்! 'நடந்து செல்பவர்கள் தண்டிக்கப்படுவார்கள்' என்று அறிவிப்புப் பலகைகள் போடப்பட்டிருப்பதைப் பல நெடுஞ்சாலைகளில் கண்டேன்.

அமெரிக்காவிலேயே மிக அதிகமான கார்கள் உள்ள நகரம் லாஸ்ஏஞ்ஜலஸ்தான். இதனால் காற்றில் புகைமண்டலம் ; எப்போதும் கலந்து நகரில் கவிந்திருக்கும். கண்களில் எரிச்சலை உணராமல் பத்து நிமிஷம் சாலையில் நிற்க முடியாது! இந்தப் புகை, தேக ஆரோக்கியத்துக்கு மிகுந்த கெடுதலை விளைவிக்க

# அமெரிக்காவில் இந்தியா



கூடியது. காரின் பின்புறத்திலிருந்து வரும் கரிப் புகையில் 'கார்பன் மானாக்ஸைடு' என்னும் விஷவாயு உண்டு.

இனி தயாரிக்கப்படும் கார்களில் இந்தப் புகையை அழிக்கும் சாதனம் ஒன்றைப் பொருத்த வேண்டும் என்று புதிதாக ஒரு சட்டம் கொண்டு வந்திருக்கிறார்கள்!

எவ்வளவோ முன்ஜாக்கிரதையாக இருந்தும உலகிலேயே மிக அதிகமான கார்கள் ஓடும் அமெரிக்காவிலே சாலைகளில் நேரும் விபத்துக்களும் அவற்றில் மரணமடைவோரின் எண்ணிக்கையும் ஏராளம். 1900 முதல் 1967 முடிய கணக்குப் போட்டுப் பார்த்தால் அமெரிக்கச் சாலைகளில் மாண்டோரின் எண்ணிக்கை, 1775ம் ஆண்டு முதல் அமெரிக்கா ஈடுபட்டுள்ள எல்லா யுத்தங்களிலும் இறந்த அமெரிக்கரின் எண்ணிக்கையை விட அதிகம்! 1966ல் மட்டும் 24 மில்லியன் கார்கள் விபத்துக்களுக்கு உள்ளாகி 53,000 மக்களைப் பலி வாங்கி இருக்கின்றன; 1,900,000 மக்களை அங்கஹீனர்களாக்கி இருக்கின்றன 4,000,000 மக்களைக் காயப்படுத்தி யிருக்கின்றன












பொருளாதார ரீதியில் இவ்விபத்துக்களால் ஏற்படும் நஷ்டம் ஆண்டொன்றுக்கு 12 மில்லியன் டாலர்கள்!

ஓய்ச்சல் ஒழிவற்ற வேகமான வாழ்க்கை நடத்தும் அமெரிக்கர்களில் பலர் திடும்மென்று ஒரு நாள் நின்று, "நாம் ஏன் இப்படிப் பரபரவென்று அலைகிறோம்? என்னத்தைச் சாதிக்கிறோம்?" என்று சிந்திக்கிறார்கள்; மலங்க மலங்க விழிக்கிறார்கள். முடுக்கிவிடப்பட்ட இயந்திரம் மாதிரிச் சென்றவர்கள் 'ஸ்பிரிங்' உடைபட்டதுபோல் நரம்புத் தளர்ச்சியுடன் உள்ளச் சோர்வும் அடைகிறார்கள். ஒன்றும் புரியாமல் ஆறுதல் தேடி மனோதத்துவ நிபுணர்களிடம் ஓடுகிறார்கள். 'ஸைகியாட்டிரிஸ்ட்' என்று அழைக்கப்படும் மனோதத்துவ நிபுணர்களுக்கு இன்று வேட்டைதான் அங்கே. ஏன், பூனைகளுக்கும் நாய்களுக்கும்கூட வெட்டர்னரி டாக்டர்கள் மட்டுமின்றி மனோதத்துவ நிபுணர்களும் உண்டு!

இந்த மாதிரியான சாரமற்ற வாழ்க்கைக்கு எதிராகத்தான் ஓர் இயக்கமே தோன்றி இருக்கிறது இன்று, அமெரிக்காவில். ஆத்மார்த்தமான ஒரு பிடிப்பு இல்லாமல் வெறும் பணத்தை மட்டும் பிரதானமாகக் கொண்ட இயந்திர வாழ்க்கை அமெரிக்க நாட்டுக்கே மிகுந்த கேடு விளைவிக்கும் என்ற கருத்தில் ஹிப்பி இயக்கம் தோன்றியது.

இந்த ஹிப்பிக்களைச் சந்தித்துப் பேசவும், அவர்கள் அதிகமாக வளைய வரும் இடங்களைப் பார்க்கவும், நியூயார்க், வாஷிங்டன், ஸான் பிரான்ஸிஸ்கோ ஆகிய நகரங்களில் எனக்கு வாய்ப்புக் கிட்டியது.

ஸான்பிரான்ஸிஸ்கோவில் இவர்கள் அதிகமாக வளையவரும் ஒரு வீதியில் சென்றால், 'அடாடா, இது என்ன அமெரிக்காதானா? அல்லது சென்னை ஜார்ஜ் டவுன் தேவராஜ முதலி தெருவுக்குள் நுழைந்து விட்டோமா?' என்ற ஐயப்பாடு தோன்றும்.

தேவராஜ முதலித் தெருவில் நாம் பார்க்கக் கூடிய அத்தனை லக்ஷ்மி, ஸரஸ்வதி, விநாயகர், கண்ணன் படங்களையும் அங்கும் நாம் காணலாம். சட்டம் போட்டு வைத்திருக்கிறார்கள், விற்பனைக்குத் தயாராக. ஊதுவத்தி மணம் கமழும்; பஜனை கோஷ்டிகள் இருக்கும்; ஏன் காவி உடை தரித்த அமெரிக்கச் சாமியாரைக்கூடப் பார்க்கலாம்!



கி.ராஜேந்திரன்

இடது பக்கம்:

ஜேம்ஸ் ரூபினுடன் கட்டுரை ஆசிரியர்; ஒளிப்பதிவு உபகரணங்களுக்கிடையில் ஜேம்ஸ் ரூபின்; ஹிப்பிக்களில் சிலர்.

இந்தப் பக்கத்தில்:

அமெரிக்கர்களின் வேகமான வாழ்க்கைக்கு ஓர் எடுத்துக்காட்டு - இரவில் விரைந்து செல்லும் கார்கள் சாலைகளை ஒளிமயமாக்குகின்றன; தபால் பெட்டி மீது ஒரு ஹிப்பி; ரவி சங்கர்.

(சித்திரம் - வி. என். ஓ'லி)

செல்வச் செழிப்புக்கு முதலிடம் அளிக்கும் அமெரிக்க வாழ்க்கையில் சாரமில்லை என்றும் அந்நிலையிலிருந்து விடுபட வேண்டும் என்றும் எண்ணுகின்ற இவர்கள், சமூகம் தானாகவே ஏற்படுத்திக் கொண்ட சட்ட திட்டங்கள் கோட்பாடுகளுக்கு அடிமையாகி விடாமல் விடுதலை பெற வேண்டும் என்றும் கருதுகிறார்கள். இதற்கெல்லாம் இந்துமதச் சித்தாந்தங்கள் உதவும் என்று நம்புகிறார்கள்.

ஆனால் இந்துக்களே இந்து மதச் சித்தாந்தங்களை முழுமையாகப் புரிந்து கொள்வது சிரமமாக இருக்கும் போது இவர்களால் அவற்றை எந்த அளவுக்குத் தெரிந்து கொண்டுவிட முடியும்?

வாஷிங்டன் டுபாயிண்ட் சர்க்கிளில், ''உங்கள் ஹிப்பி இயக்கத்தின் முக்கியமான கோட்பாடு என்ன?'' என்று கேட்டேன் ஒருவரை.

''நாங்கள் உலக சமாதானத்தை விரும்புகிறோம்'' என்றார் அவர்.

''உலக சமாதானத்தை விரும்பாதவர் யார்? எல்லாருமேதான் அதை வரவேற்பார்கள். ஆனால் அந்த உன்னத லட்சியத்தை அடைய வழி என்ன என்று நினைக்கிறீர்கள்?''

''குண்டு மழை பொழிந்து கொலை புரிவதை நிறுத்த வேண்டும்'' என்றார் ஒருவர்.

''அமெரிக்கா வடக்கு வியட்நாமில் குண்டு போடுவதை நிறுத்தி விட்டால் உலக அமைதி உருவாகிவிடும் என்று நினைக்கிறீர்களா?''

''நான் அப்படிக் கருதவில்லை. யுத்த முஸ்தீபுகளை அதிகரிக்க வேண்டும். வியட்நாமில் யுத்தத்தைக் கடுமையாக்கிச் சமாதானத்தை விரைவில் கொண்டு வரவேண்டும்'' என்றார் இன்னொரு ஹிப்பி.

''அது சரி, நீங்கள் எல்.எஸ்.டி., கஞ்சா போன்ற போதை தரும் மருந்துகளை உபயோகிக்கிறீர்களே, அது எதற்காக?''

''இந்த இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் உலக அமைதி ஏற்பட்டால் எப்படி இருக்கும் என்பதை உணர அம்மருந்துகள் உதவுகின்றன'' என்று பதில் கிடைத்தது.

அவர்கள் மருந்தை உபயோகித்து மயங்குவது இருக்கட்டும்; இந்த விதமாகவெல்லாம் செயலாற்றிச் சமூகத்தையே மாற்றி அமைத்துவிடப் போகிற ஒரு சீர்திருத்த இயக்கம் நடத்துவதாக அல்லவோ தங்களைத் தாங்களே மயக்கிக் கொள்கிறார்கள்!

அவதார் (அவதாரம்) என்ற புனிதச் சொல்லைத் தன் பெயராகக் கொண்டு ஒரு ஹிப்பி பத்திரிகை வெளிவருகிறது அமெரிக்காவிலே. அதில் இடம் பெறும் சில விளம்பரங்களைப் பார்த்தால் வயிற்றைக் குமட்டும் நமக்கு. எத்தனை விதமான காமவிகார மனநோய்கள் உண்டோ, அத்தனைக்கும் ஆள் சேர்க்கும் வகையில் விதம் விதமான வரி விளம்பரங்களைப் பலப் பலர் வார்த்தை ஜாலம் செய்து கொடுத்திருப்பார்கள்! வார்த்தை ஜாலம் விஷயத்தைப் பட்டவர்த்தனமாக வெளியிடாமல் மறைக்க.

நான் சந்தித்த பெரும்பாலான ஹிப்பிக்கள் குளித்து மாதக் கணக்கில் ஆகியிருக்கும். தலை சீப்பைக் கண்டு வாரக் கணக்கில் ஆகியிருக்கும். உடை சோப்பைக் கண்டு நாள் கணக்கில் ஆகியிருக்கும். முகக்ஷவரம் கூடச் செய்து கொள்ளாமல் மார்பில் பிளாஸ்டிக் மணிமாலைகள் அசைந்தாட, எந்த வேலையும் இல்லாதவர்கள் போல் தெருவில் அலைகிறார்கள்.

பலர், ''எங்கள் இயக்கத்துக்குப் பணம் தாருங்கள்'' என்று கேட்கிறார்கள். சிலர் கூச்சப்படாமல், ''பசிக்கிறது. காசு தாருங்கள்'' என்றே கேட்கிறார்கள். 'செல்வம் கொழிக்கும் சீமையா இது?' என்ற கலக்கம் ஏற்படும் நமக்கு.

''என்னைப் படம் பிடித்துக் கொள்ளுங்கள். ஆனால் அமெரிக்க நாளிதழ் எதிலும் படம் வரக்கூடாது'' என்று சொன்னாள் ஒருத்தி. வீட்டைத் துறந்து ஓடி வந்த இவள் தனது பெற்றோர் தான் இருக்கும் இடத்தை அறிந்து கொண்டுவிடக்கூடாது என்பதில் அக்கரை காட்டினாள்.

ஹிப்பிக்களில் பலர் சரியானபடி கண்டிப்புடன் வளர்க்கப்படாததால் தன்னிச்சையாக வீட்டை விட்டுக் கிளம்பி வந்துவிட்டவர்கள். வேறு பலர் தாய் தந்தையரிடையே சரியான சுமுகமான சந்தோஷமான நல்லுறவு இல்லாததைக் கண்டு மனமுடைந்து வீட்டை வெறுத்து வெளிக் கிளம்பியவர்கள். மிகப் பெரும்பாலோர் ஹிப்பியாக இருப்பது தான் இன்றைய இளம் தலைமுறையின் நாகரிகம் என்ற கருத்தில் இயக்கத்தில் சேர்ந்தவர்கள். இவர்களில் பணக்காரர்களான வாலிபர்களும் பலர் உண்டு. இவர்கள் மற்ற பல ஹிப்பிக்களுக்குச் சில சமயங்களில் உதவுவார்கள்.

ஹிப்பிக்கள் விரும்பிச் செய்யும் பஜனை ரிக்கார்டு ஒன்றை ஒரு கடையில் பார்த்தேன். 'ஹரே கிருஷ்ண' பஜனை ரிக்கார்டு அது. வைஷ்ணவர் ஒருவர்தான் ரிகார்டு கொடுத்திருந்தார். அவர் படத்தையும் போட்டிருந்தார்கள். அதனடியில் அந்த பஜனையைப் பற்றிச் சில வரிகளும் எழுதியிருந்தார்கள். ஆரம்ப வரிகள் இவை:

''**உலகில் முதல் விண்வெளி மனிதன் நாரதரே.** அந்த நாரதர் ஆன்ம விடுதலைக்காக இயற்றிப் பாடிய பஜனைப் பாடல் இது.''

ஹிப்பிக்கள் கூடும் கிளப்புகளில் நவீன பாணி டப்பா சங்கீதம் காதைத் துளைக்கும். பல வண்ண விளக்கொளிகள் அறை முழுவதும் சுழன்று வந்து ஒரு கிறுகிறுப்பை ஏற்படுத்தும். பட்டை தீட்டப்பட்ட வைரத்தில் சூரிய ஒளிக் கிரணம் படும்போது ஒளிச் சிதறல் ஏற்பட்டு வண்ண வண்ண ஒளிப் பொட்டுக்கள் சிதறுவதைப் பலர் கவனித்திருக்கலாம். அம்மாதிரியான வண்ண ஒளிச் சிதறல் அறை முழுவதும் பரவிச் சுழன்று கொண்டிருக்கும் இந்தக் கிளப்புகளில்.

ஹிப்பிக்களின் நடனம் விநோதமானது. எந்தவிதமான கட்டுப்பாடும் விதிமுறையும் இன்றி உருண்டு புரண்டு, அசைந்து ஆடி, நொடித்து ஒடித்து, விழுந்து எழுந்து, வளைந்து நெளிந்து ஆடுவார்கள். வேப்பிலைக் கொத்தால் பேய் விரட்டுகையில் சில பெண்களின் தலை சுழலுமே அப்படி இங்கு நடனமாடும் பலரது தலைகள் சுழலும், சுழலும்,

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிறுர்கள்!

நீங்கள் பற்பொடியை விரும்பினுல் இத்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.







பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம்கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினுல் பல்துலக்குங்கள்

...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் கிரீமையே வாங்குகிறுர்கள்.

சுழன்று கொண்டே இருக்கும்! ஹிப்பிக் களின் — குறிப்பாகப் பெண்களின்—உடை களும், வண்ணக் கலவைகளைச் சிந்தனை ஏது மின்றி அள்ளித் தெளித்தாற்போலும் குழைந்து மனம் போனபடி பூசினாற் போலும் தோற்றமளிக்கும்.

இவை யெல்லாம் எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை என்ற போதிலும் அமெரிக்கா வில் ஹிப்பி இயக்கம் நாளுக்கு நாள் வளர்ந்து வருவதையும் உணர்ந்தேன். ஹிப்பிக்களைப் பற்றி நான் பேசிய பல அமெரிக்கர் அவர்களிடம் . அனுதாபம் கொண்டிருந்தனர். 'இன்றைய அமெரிக்க சமூகத்தில் வாழ்க்கை முறையில் கோளாறுகள் பல உள்ளன. அவற்றை நிவர்த்திக்க வேண்டியது அவசியம்தான். அந்த அள வுக்கு ஹிப்பி இயக்கத்தை நான் வரவேற் கிறேன்' என்று பலர் சொன்னார்கள். வேறு சிலர் அலட்சியமாக ஹிப்பிக்களை ஒதுக்கித் தள்ளினார்கள். "முன்பு 'பீட்னிக்' என்று கூறிக் கொண்டிருந்தார்கள். இப்போது அது பழசாகிப் போய் விட்டது. 'ஹிப்பி'யும் இன்னும் கொஞ்ச காலத்தில் பழசாகிப் போய்விடும். புது 'நாகரிகம்' வேறு ஏதாவது உருவாகும். இதற்கெல்லாம் அர்த்தமே இல்லை. விட்டுத் தள்ளுங்கள்" என்றார்கள்.

ஹிப்பிக்களிடையில் மிகவும் பிரபலமான வர்கள் 'பீட்டில்கள்' என்னும் பிரசித்தி பெற்ற நவீன பாணிப் பாடகர்கள். பீட்டில்களுடைய மூச்சுக் காற்று அடைக்கப் பட்டிருப்பதாகச் சொல்லிச் சில கடைகளில் விலைவைத்த சிறு பாட்டில்கள் இருந்தன. இவற்றை நாலு டாலர், ஐந்து டாலர் கொடுத்து வாங்கி சங்கிலியில் கோத்துக் கழுத்திலிருந்து நெஞ்சில் அசைந்தாடும்படி தொங்கவிட்டுக் கொள்ளும் பீட்டில் பித் தர்கள் நிரம்ப உண்டு. பீட்டில்கள் மகரிஷி மகேஷ் யோகியிடம் பற்றுதல் கொண்டால் ஹிப்பிக்கள் அனைவரும் அவரிடம் பற்றுதல் கொள்வார்கள். மகரிஷி மகேஷ் யோகி இந்தியாவிலிருந்து அமெரிக்கா வந்து திடீர் பிராபல்யம் அடைந்து பணமும் பண்ணிய வர். இன்று ரிஷிகேசத்தில் ஆசிரமம் அமைத் திருக்கிறார். அவர் என்ன செய்தாரோ செய்யவில்லையோ ஹிப்பிக்கள் போதை தரும் மருந்துகள் அருந்துவதை நிறுத்திவிட வேண் டும் என்று பிரசாரம் செய்து வருகிறார். ஆன்மாவை ஒருநிலைப்படுத்தி தியானத்தில் ஈடுபடுவதன் மூலம் மயக்க மருந்தால் அவர்கள் பெறுகின்ற போலி இன்பத்தை உண்மையாகவே பெறலாம் என்று கூறி வரு கிறார். பலர் இவரது இந்த வேண்டுகோளுக்கு இணங்கி இவரது பக்தர்களாகி போதை தரும் பொருள்களை விட்டொழித்திருக் கிறார்கள். அந்த அளவுக்கு மகேஷ் யோகி நல்ல காரியம் செய்திருக்கிறார்தான்.

மகேஷ் யோகியை விட அதிகமாக ஹிப் பிக்களிடையே பிராபல்யம் அடைந்திருப் பவர் ரவிசங்கர். ஹிப்பிக்களிடையே இவர் பிரபலமாக இருப்பதாகச் சொன்னதும் மற்ற அமெரிக்கர்கள் இவரைக் கவனிக்கவில்லை என்பதல்ல பொருள். சங்கீத ரசனை உள்ள அமெரிக்கர்கள் அனைவருக்கும் இன்று ரவி சங்கரின் பெயர் தெரியும். பீட்டில்களில் ஒருவர் இவரிடம் சித்தார் கற்றுக் கொண்ட தால் ரவிசங்கர் ஹிப்பிக்களிடையே மிகவும் பிரபலமடைந்தார். பீட்டில்களை விட ஒரு படி அதிகமாகவே இவரது புகழ் இன்று அமெரிக்காவில் பரவியிருக்கிறது என்றால் அது மிகையாகாது.

நியூயார்க்கில் புதிதாக நிர்மாணிக்கப் பட்டுள்ள லிங்கன் மெம்மோரியல் சென்டர் அரங்கில் ரவிசங்கரின் ஸித்தார் கச்சேரியைக் கேட்டேன். அற்புதமான கட்டிடம்; அரு மையான சங்கீதம்; ஆனந்த பரவசமடைந்த ரசிகர் கூட்டம்.

கட்டிடம் நிரம்பி வழிந்தது. ஹிப்பிக்கள் பலர் இருந்தனர். அவர்களில் ஆண்களில் பலர் பூக்களைத் தலையில் செருகிக் கொண்டு வந்திருந்தனர். சிலர் ஊதுபத்தியைக் கரத்தில் பிடித்து முகர்ந்து கொண்டு வந்தனர்.

ரவிசங்கர் மேடை மீது தோன்றினார். கர கோஷம் அடங்கச் சரியாக இரண்டு நிமி ஷங்கள் ஆயின. அல்லா ரக்காவுக்கும் அப்படியே கரக் கம்பம் செய்தனர். கலகல கலகலவென்று தந்திகளை மீட்டினார் ரவி. ஊசி போட்டால் விழும் சத்தம் கேட்கிற மாதிரி அவையோரிடத்தில் அத்தனை அமைதி.

ஸித்தார் வாத்தியம் எப்படி வீணையி லிருந்து படிப்படியாகப் பல மாறுதல்க ளுடன் உருவாகியது. என்பதைச் சுருக்க மாகச் சொல்லி வாத்தியத்தை வர்ணித் தார் ரவி சங்கர். தாம் இசைக்கப் போகும் ராகங்களைச் சொன்னார். அல்லா ரக்காவின் தபேலாவை வர்ணித்து தாளம் பற்றிய குறிப்பையும் கொடுத்தார். இந்தியாவில் தாம் வாசிக்கும்போது எப்படி ரசிகர்களுக் கும் வாசிப்பவர்களுக்கும் இடையில் ஒரு தொடர்பு இருந்து கொண்டிருக்கும் என் பதைச் சொன்னார் ரவி சங்கர். ரசிகர்கள், தலையாட்டுவதையும் 'வாரே வாஹ்!' எனப் பாராட்டுவதையும் குறிப்பிட்டார்.

இதனால்தானோ என்னவோ கச்சேரியின் போது சில ஹிப்பிகள் வேளை கெட்ட வேளை யில் 'ஆ, ஊ' என்று பரவசக் கூச்சல் போட் டார்கள். துரித கதியில் ஸித்தாரையும் தபே லாவையும் வாசிக்கும்போது அமெரிக்கர் தம்மை மறந்து ரசிக்கிறார்கள். அந்த அள வுக்கு ரசிப்பு, ராகத்தை அமைதியாக

# தேர்தல் மொழி



தகவல்:
"எம்பெஸ்"

தேர்தலில் மக்கள் தங்கள் கோபத் தைத்தான் வெளியிடுகிறார்கள்; பாராட்டுதலை அல்ல. சாதாரண மனிதன் எதையும் ஆதரித்து ஓட்டுப் போடுவதில்லை. எதையாவது எதிர்த்தே ஓட்டுப் போடுகிறான். —மன்ரோ

வாசிக்கும்போது இருப்பதாகத் தோன்றவில்லை. ஆயினும் பொதுவாக அமெரிக்க ரசிகர்கள் அமைதியாக இரண்டு மணி நேரம் இருந்து கேட்ட அழகுக்கும் ஒவ்வொரு ராகமும் இறுதியில் கச்சேரியும் முடிந்த பிறகு அவர்கள் மனம் விட்டு இடி முழக்கம் போன்ற சத்தம் எழுமளவுக்குக் கரக்கம்பம் செய்து அழகுக்கும் 'சபாஷ்' போட்டு அப்ளாஸும் கொடுக்கலாம்தான். ரவிசங்கரின் புகழ் அமெரிக்காவில் திடீரென்று ஏற்பட்டதல்ல. அயராமல் அவர் உழைத்துச் சிறுகச் சிறுகச் சம்பாதித்துச் சேர்த்த பெருந் தனம்.

ஆரம்பத்தில் இந்திய சங்கீதத்தைப் புதிதாகக் கேட்கத் தொடங்குகிற அமெரிக்கர்களுக்காகச் சில இனங்களில் விட்டுக் கொடுத்தார் ரவிசங்கர். ஒரு ராகத்தை அவர் இந்தியாவில் ஒரு மணி நேரம் வாசிப்பார் என்றால் அமெரிக்காவில் பதினைந்து நிமிடங்களுடன் நிறுத்திக் கொண்டார். இந்தியாவில் கச்சேரி செய்ய ஆரம்பித்தால் சில சமயங்களில் இரவு ஒரு மணி இரண்டு மணிகூட ஆகிவிடும். ரசிகர்கள் அசைய மாட்டார்கள். அமெரிக்காவில் மொத்தம் இரண்டு மணி நேரத்துக்கு மேல் கச்சேரி செய்ய மாட்டார்.

ஒரு ராகத்தைப் பத்து அல்லது பதினைந்து நிமிஷங்களே அவர் வாசிப்பதைச் சிலர் குறை கூறி வந்தார்கள். 'மக்களின் மனம் கவருவதற்காக அவர் விட்டுக் கொடுக்கிறார். கலையை அவர் தமது இயல்புக்கு விரோதமான முறையில் கையாள்கிறார்' என்றெல்லாம் சொன்னார்கள்.

ஆனால் நான் நியூயார்க்கில் இருந்த போது அவர் மூன்று கச்சேரிகள் செய்தார். முதல் இரண்டு கச்சேரிகளில் நாலைந்து ராகங்கள் இடம் பெற்ற போதிலும் கடைசிக் கச்சேரியில் இரண்டே ராகங்கள்தான் வாசித்தார்.

ரவிசங்கர் அமெரிக்க ரசிகர்களுக்காக விட்டுக் கொடுத்த போதிலும் இறுதியில் தம் பக்கமாக அவர்களை வளைத்துக் கொண்டு விட்டார் என்பதுதானே இதன் பொருள்? முதலில் ரசனையை வளர்த்தவர் இப்போது அந்த ரசனையின் தரத்தை உயர்த்தி வருகிறார் என்பதுதானே அர்த்தம்?

ரவிசங்கரின் ஸித்தார் இசை ரிக்கார்டுகள் இன்று அமெரிக்காவில் ஏராளமாக விற்பனையாகின்றன; ஸித்தார் பள்ளிக்கூடம் ஒன்றும் நடத்துகிறார் அவர், அமெரிக்காவிலே.

ஸித்தார் மட்டுமின்றி வேறு பல இந்தியக் கலைகளுக்கும் அமெரிக்காவில் மவுசு பெருகி வருகிறது. வெஸ்லியன் சர்வ கலாசாலையில் ஆண்டு தோறும் தமிழகத்திலிருந்து சிறந்த வித்வான்களை வரவழைத்து கர்நாடக இசையில் அமெரிக்க மாணவ மாணவிகளுக்குப் பயிற்சி அளிக்கிறார்கள்.

ஸான்பிரான்ஸிஸ்கோ சர்வ கலாசாலையில் வீணை கற்றுக் கொள்ளும் மாணவியையும் நான் சந்தித்தேன்.

இந்தியக் கலைகளில் அமெரிக்கருக்கு ஏற்பட்டு வரும் இந்த விழிப்பை பயன்படுத்திக் கொண்டு சிலர் பணம் பண்ணும் நோக்கத்துடன் மட்டமான விதத்தில் நடந்துகொள்வதையும் கவனித்து விசனித்தேன். இந்திய — ஓரியண்டல் நடனங்கள் ஆடுவதாகக் கூறிக் கொண்டு சில கற்றுக்குட்டிகள் பாரத நாட்டின் மானத்தைக் கப்பலேற்றுகிறார்கள்.

ஆயினும் தரமான முறையில் இந்தியக் கலைகளில் அமெரிக்கரின் ஆர்வம் வளரப் பணியாற்றும் ஸ்தாபனங்களும் அங்குள்ளன என்பது ஆறுதல் அளிக்கும் நமக்கு.

பான் ஓரியண்ட் ஆர்ட் ஃபௌண்டேஷன் என்பது இத்தகைய ஒரு ஸ்தாபனம்தான். இதன் தலைவரான ஜேம்ஸ் ரூபின் இந்தியக் கலைகளில் குறிப்பாக கர்நாடக சங்கீதத்தில் அளப்பரிய ஈடுபாடு கொண்டவர். டி. ஆர். மகாலிங்கத்தின் புல்லாங்குழல் இசைத் தட்டுக்கள் வாயிலாக முதன் முதலில் கர்நாடக சங்கீதத்தை அறிமுகப்படுத்திக் கொண்டவரின் மனம் கொஞ்சம் கொஞ்சமாக அதில் லயிக்கத் தொடங்கியது. வீணை பாலசந்தர் அமெரிக்கா சென்றிருந்தபோது அவரது நல்ல நண்பரானார். பிறகு இ. நா. சபையில் உயர் நிர்வாகியாக உள்ள ஸ்ரீ வி. வி. நரசிம்மன் மூலமாக ரூபினுக்கு ஸ்ரீ சதாசிவம் — ஸ்ரீமதி எம். எஸ். தம்பதியருடன் தொடர்பும் நட்பும் கிட்டியது.

1966ஆம் ஆண்டு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அமெரிக்காவின் பல நகரங்களிலும், சர்வ கலாசாலைகளிலும் கச்சேரிகள் நிகழ்த்தியது 'பான் ஓரியண்ட் ஆர்ட் பவுண்டேஷன்' ஆதரவிலேதான்.

இப்போது ஜேம்ஸ் ரூபின் இந்த ஸ்தாபனத்தின் மூலம் அமெரிக்காவில் கர்நாடக இசையைப் பரப்பச் சீரிய தொண்டாற்றி வருகிறார். கர்நாடக இசையின் ஆரம்பப் பாடங்களை ரிக்கார்டு செய்து, கற்க விரும்புவோருக்குத் தருவது ஒரு திட்டம். பரவலான முறையில் கர்நாடக இசையில் மக்களுக்கு ஒரு பிடிப்பு ஏற்பட டெலிவிஷனிலும் ரேடியோவிலும் இக்கலைக்கு நேரம் ஒதுக்கச் செய்வது மற்றொரு திட்டம். இவ்விரண்டு நோக்கங்களுக்காகவும் பாடுபடும் ஜேம்ஸ் ரூபின் ஆண்டுதோறும் சங்கீத சீஸனின் போது சென்னைக்கு வரத் தவறுவதில்லை. கச்சேரிகளையும் சில இளம் வித்வான்களின் உதவியுடன் ஆரம்பப் பாடங்களையும் டேப் செய்து கொண்டு திரும்புகிறார்.

பாஸ்டனில் ஒரு 'ரியல் எஸ்டேட்' (நிலம் வாங்கி மனைகளாகப் பிரித்து, வீடு கட்டி விற்பது அல்லது வாடகைக்கு விடுவது) நிறுவனத்தில் பங்குதாரராக இருந்து அதற்காக உழைக்கவும் செய்யும் ஜேம்ஸ் ரூபினுடன் அவரது குடியிருப்புக்குள் நுழைந்தால் நாலாபுறமும் உயர்ரக டேப் ரிக்கார்டர்களும், வீணையும் தம்புராவும், தமிழகத்தை நினைவு படுத்தும் பல கலைப் பொருள்களும் நிரம்பி இருப்பதைக் காணலாம். வீணை தனம்மாள் முதல் அரியூர் சகோதரிகள் வரை பலப் பலரது இசையை டேப்பிலே பதிவாக்கி வைத்திருக்கிறார்.

தங்கள் தேசத்துக்கு அடுத்தபடியாக உலகில் உள்ள மிகப் பெரிய ஜனநாயக நாடு இந்தியாவே என்ற காரணத்தால் அமெரிக்கருக்கு இந்தியாவிடம் நல்லெண்ணம் உண்டு. நமது தொன்மையான கலைகள், ஆன்மீக வளர்ச்சி ஆகியவை குறித்து அங்கு ஏற்பட்டுள்ள புதிய விழிப்பு இந்த நல்லெண்ணத்தை மேலும் வளர்த்திருக்கிறது.



## கலாட்டா கல்யாணம்

**வா**லிபன் மதன் நல்ல பணக்காரப் பிள்ளையாயிருந்தும் தன் காதலைக் கல்யாணத்தில் முடிக்க மிகவும் சிரமப்படும்படியாகிவிட்டது. அவன் காதலியின் உடன் பிறந்த சகோதரிகள் மூவருக்கும் வரன் தேட வேண்டிய நிர்ப்பந்தம் அவன் தலையில் சுமத்தப்படுகிறது. பெண்ணைப் பெற்றவர் தம்முடைய நான்கு பெண்களுக்கும் ஒரே மேடையில் ஒரே முகூர்த்தத்தில் திருமணம் நடத்துவதாக ஏழுமலையானுக்குப் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தாரே!

ஒவ்வொரு பெண்ணும் ஒரு கிறுக்கு. ஒவ்வொரு கிறுக்குக்கும் ஒரு அபிப்பிராயம். மேற்படி கிறுக்குகளின் அபிப்பிராயப்படி மாப்பிள்ளை தேடுவதற்குள் மதனுக்குப் போதும் போதுமென்றாகி விடுகிறது.

மதனாக வரும் சிவாஜி கணேசன், விம்மாமல், வெடிக்காமல், சீறாமல் ஒவ்வொரு கட்டத்திலும் சிரிக்க வைக்கிறார். நடிப்பில் நல்ல மாறுதல். 'இப்படியும் இவருக்கு நடிக்கத் தெரியுமா?' என்று வியந்து பாராட்டுகிறோம். உடல் இளைப்பின் காரணமாகத் தோற்றத்தில் இளமைப் பொலிவு காண்கிறது. உற்சாகமும், துடிப்பும் மிக்க இளைஞனாக வந்து மிகவும் நன்றாக நடிக்கிறார்.

சோவும், நாகேஷும் அடிக்கும் கேலிக் கூத்துக்கள் தியேட்டரையே அதிரச் செய்கின்றன.

பெண்களைப் பெற்றவராக வரும் தங்கவேலுவுக்கு நல்ல வாய்ப்பு. அதை நன்றாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

ஜயலலிதா, மனோரமா, ஜோதி லட்சுமி, சச்சு ஆகியவர்கள் கல்யாணத்துக்கு இருக்கும் பெண்கள். ஜயலலிதாவுக்கு சிவாஜியுடன் கைகோத்துக் கொண்டு ஆடுவதற்கே சரியாக இருக்கிறது. மனோரமா நாகேஷுடன் வேண்டிய மட்டும் கூத்தடிக்கிறார். ஆண் வாடையே ஆகாது என்னும் இடங்களில் நன்றாக நடிக்கிறார்.

சினிமாப் பித்துப் பிடித்த ஜவுளி வியாபாரியாக வரும் வி. கோபாலகிருஷ்ணன் நடிப்பு பாராட்டும்படியாக இருக்கிறது. அவ்வளவு அசடு வழிய அவரால் எப்படி முடிகிறது?

வெறும் கலாட்டாவும் கல்யாணமுமாகப் படத்தை முடித்துவிட விருப்பமில்லை போலும். கள்ளக் கடத்தல்காரர்களோடு கைகலப்பு, 'கும்கும்' குத்துச் சண்டைகள் எல்லாவற்றையும் அலுத்துப் போகிறவரையில் சேர்த்திருக்கிறார்கள். அவற்றைத் தவிர்த்திருக்கலாம்.

நகைச்சுவை மிளிரும் வசனம் பாத்திரங்களுக்கு உயிரூட்டுகின்றன. திரைக் கதையைக் குழப்பமில்லாமல் அமைத்திருப்பது மெச்சத் தகுந்தது.

சிவாஜியும் நாகேஷும் ஒரு குழந்தையை வைத்துக் கொண்டு அடிக்கும் கேலிக் கூத்துக்களும், அந்தக் குழந்தையைக் கொல்ல நடக்கும் சதி முயற்சிகளும் தேவையில்லாத காட்சிகள்.

எல்லாத் தமிழ்ப் படங்களிலும் புகுந்து விடும் சில ஆபாசக் காட்சிகள், நடனங்கள், பாடல்கள் இதிலும் உண்டு. மற்றப்படி ''கலாட்டா கல்யாணம்'' பார்த்து மகிழ்ந்து சிரித்து ரசிக்க ஒரு சிறந்த ஹாஸ்யப் படம். 'ஆயிரம் கலாட்டாக்கள் செய்து ஐந்து கல்யாணங்கள் பண்ணி வை' என்று புதுமொழி ஒன்றை உருவாக்கலாம்!

# ஓநாய்க் கோட்டை

**17**

கதை: வாண்டுமாமா
சித்திரம்: ரமணி..


















ஜம்பு உன் உதவியினால் எப்படியோ சிலந்தியைப் போலத் தொத்தி ஏறி விட்டேன். இனி..?


இந்த இடை வெளியை எப்படி மூடி அடைப்பது? ம்.. மறு பக்கத்தில் அதோ அவர்களும் வந்து விட்டார்கள்..


அதோ.. அதோ! அவன்தான், குறி தவறக் கூடாது, கொன்று தள்ளுங்கள்..


சீறி வரும் அம்புகளிட மிருந்து தப்பப் பெரிய தொரு பாறையின் பின்னால் போய் ஒண்டினார்கள் கந்தனும் ஜம்


வில் வித்தையிலே வல்லவர்களான அவர்களின் தாக்குதலைச் சமாளிப்பது கந்தனுக்குச் சுலபமாக இல்லை.


விர்ரென்று பாய்ந்த தோர் அம்பு கந்தனின் நெற்றியைக் காயப் படுத்தியது....
ஆ... ஊம்.. ம்..


தாங்க முடியாத வலியினால் கந்தன் நிலை குலைந்து கீழே சாய்ந்தான்...

(தொடரும்.)

# இனிக்கும் நினைவுகள்

கோமகள்

## 5. "அவர் உங்கள் நண்பர் என்று...."

சீலியா வெள்ளை ஓவர்கோட்டைச் சேரில் போட்டுவிட்டு வார்டு சுற்ற ஆரம்பித்தாள். அன்று காலை பிறந்த தின விழா கொண்டாடியதும், அதனால் ஏற்பட்ட பழைய ஊமைக் காயங்கள் கொஞ்சம் சீழ் பிடித்துப் புண்ணாகியதும் மறந்து விட்டன. வரும் போதெல்லாம் நினைவில் கற்பூரமாகக் கனன்று சாம்பிராணியாகப் புகைந்து கொண்டிருந்த பெரியம்மாவின் நினைவுகள் உறைந்து போர்த்திக் கொண்டன.

சீலியா தன் இருக்கைக்குத் திரும்பி வந்த போது பெண்கள் விடுதியிலிருந்த ஆள் ஒருவன் அவளுக்காகக் காத்திருந்தான். அவளைக் கண்டதும் ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுத் தயங்கி நின்றான். அதை அவள் அவசரமாகப் பிரித்துப் படித்து விட்டு, ஒரு காகிதத்தை எடுத்து அவசரமாக எழுதி மடித்தாள். "பாரதி அம்மாவிடம் பத்திரமாகக் கொடுத்து உடனே தபாலில் சேர்க்கச் சொல்லு" என்று கூறியவாறே அவனிடம் கொடுத்தாள்.

"சரிம்மா !"

வந்தவன் போன சிறிது நேரத்துக்கெல்லாம் வசந்தன் வந்தான். சீலியாவுக்குப் பிறந்த நாள் வாழ்த்துக்கள் தெரிவித்தான்.

நன்றி கூறிய அவளை வியப்போடு பார்த்து, "'தமிழரசி' என்பது நீங்களா?" என்று கேட்டான்.

"இல்லை !"

சீலியா திகைப்போடு தலையாட்டி மறுத்தாள்.

"பின், இந்தக் கடிதம்?"

"இது என் தோழி பாரதிக்கு வந்தது !"

"ஓ! நம் மருத்துவக் கல்லூரி மாணவிதான் இந்தத் தமிழரசியோ ? எனக்குத் தெரியாதே !"

"ஒருசில காரணங்களுக்காக அவள் இது வெளியில் தெரிய வேண்டாம் என்று விரும்புகிறாள்."

"ஏன் ? நல்ல எழுத்துக்கள், உயர்ந்த கருத்துக்கள். ஏன் வெளியில் தெரியக் கூடாது?"

"அது அவள் சொந்த விஷயம்! எனக்கு எப்படித் தெரியும்?"

"ஓகே! சந்தர்ப்பம் வரும்பொழுது எனக்கு அவர்களை அறிமுகப்படுத்துவீர்களா? அந்தக் கதைகளைப் புகழ்ந்து சில மனப்பூர்வமான வார்த்தைகளைக் கூற வேண்டும்."

"ஓ! நிச்சயமாய்!"

மதிய உணவின் போது சீலியா அவனைக் காண்டீனுக்கு அழைத்தாள். அவன் மரியாதையாக மறுத்துவிட்டுத் தன் அறைக்கு வந்தான்.

வசந்தன் சாப்பிட்டானதும் செல்லம்மாவைப் பற்றி நினைத்தான்.



திவாகரன் போய் வருவான். இப்போது அம்மாவுக்குப் போன் பண்ணலாமா! சீ! இந்த நேரம் அயர்ந்து தூங்குவார்கள். மாலையில் பண்ணிப் பார்க்கலாம்.' இப்படி எண்ணியவன் படுக்கை விரித்துப் படுத்தான். அடுத்த கணமே நிம்மதியான தூக்கம் அவனைக் கவ்விக் கொண்டது.

ஃ ஃ ஃ

"பரமஹம்ஸா! எழுந்திரடா!'' — என்ற பலமான சத்தத்தில் வசந்தன் ஊமல் வந்ததையும், நான் உதவியதையும் சொன்னளா, இல்லையா?''

''சொல்லவில்லையே !''

''சே ! உன் காதலில் இன்னும் ஒரு முன்னேற்றத்தையும் காணுமே!''

''ஷட் அப் ! வாய்க்கு வந்தபடி பேசாதே! தனே மாணவியை இத்தனே கேலி பேசுமளவுக்கு என் பண்பு வளரவில்லை !'' என்று சொல்லி விட்டு, அன்னையுடன் பேச போன் அருகே சென்றுன். சிறிது நேரத்தில் அன்னையின் குரல் ஒலித்தது.



கண் விழித்த போது சங்கரன் சிரித்த முகத்தோடு நின்றிருந்தான். ''தூக்கத்திலேயே சிரிக்கிருயேடா, பாவி !''

''என்ன விஷயம் சங்கர் ? ரொம்ப அவசரமாகத் தூக்கத்திலிருந்தவனே எழுப்புகிருயே !''

''காரியமாகத்தானப்பா ! நீ என்ன வர வரக் காந்தித் தூக்கம் போட ஆரம்பித்து விட்டாய். உம்! இப்போது தூங்கினல்தானே இரவு விழித்திருக்கலாம்'' என்று ஒரு மாதிரியாக இழுத்தவாறே தன் கண்ணைச் சிமிட்டினன் சங்கர்.

'' இதற்குத்தான, எழுப்பினே !.... என்ன கற்பனை மூளைடா உனக்கு?''

''கிடக்கட்டும். காலையில் சீலியா பஸ்ஸுக்குப் பணம் எடுத்துக் கொள்

''என்னம்மா, எப்படி இருக்கே?''

''நன்ருக இருக்கிறேன். இதோ திவாகர்கூட வந்திருக்கிருன். நீ நிம்மதியாக இரு. ஓடி வந்து விடாதே! நன்ருகச் சாப்பிடு.....!''

''என்னம்மா இது? சாப்பிடாமல் பட்டினி கிடக்க என் வயிறு இடம் கொடுக்காது. நீதான் மருந்துகளைத் தவருமல் சாப்பிட வேண்டும்.''

'' நான் மறந்தாலும் இங்கே நர்ஸ்கள் புகட்டாத தோஷம்தான். அதனல் எப்படியும் சாப்பிட்டு விடுவேன். கவலைப்படாதே. பக்கத்தில் இருக்கும் நர்ஸ் நான் அதிகம் பேசக் கூடாது என்கிருள். வைத்துவிடட்டுமா......?''

''சரியம்மா! மருந்தை மறந்து விடாதே. ஞாபகம் இருக்கட்டும்.''

வசந்தன் போனை வைத்து விட்டுத் திரும்பியபோது சங்கரன் போனுக்குக் காத்திருந்தான். ''கொடப்பா! அம்மாதானுடா உலகில் உனக்கு எல்லாமே! எத்தனை அன்பு, ஆசை! அதனுல்தான் அருகே கிளுகிளுக்கும் யௌவனமும், பருவமும் உன்னை ஒன்றும் செய்யமுடியவில்லை. உம்! இது எத்தனை நாள், பார்ப்போம்...'' என்றான்.

'எத்தனை நாள்?' என்ற வார்த்தைகளைக் கேட்டகவும் வசந்தனின் நெஞ்சு பகீரென்றது. நாட் கணக்கிலா, மாதக் கணக்கிலா, வருடக் கணக்கிலா? இன்னும் எத்தனை நாட்கள் அவன் 'அம்மா அம்மா' என்று சொல்லும் பாக்கியம் கிட்டப் போகிறதோ?''



வசந்தனுக்கு என்னவோ செய்தது. தலையைப் பற்றிக் கொண்டான்.

வசந்தன் வார்டுக்கு வந்தபோது அவனை எதிர்நோக்கிச் சீலியா நின்று கொண்டிருந்தாள். ''வாருங்கள் டாக்டர்! ஸிசேரியன் நடக்கப் போகிறது. உங்களுக்குச் சொல்லியனுப்ப ஆள் தேடிக் கொண்டிருந்தேன்'' என மெல்லிய குரலில் கூறினாள். வசந்தன் அவளைப் பின்தொடர்ந்தான்.

ஆபரேஷன் அறையில் வேறு பல ஹவுஸ் ஸர்ஜன்களும் குழுமியிருந்தனர். ஆனால் 'பாஸ்' வரவில்லை.... 'ட்யூட்டி அஸிஸ்டெண்ட் ஸர்ஜன்' தான் வழக்கமாக இதைச் செய்ய வேண்டுமாதலால் அவரே வந்தார். பூர்வாங்கமான எல்லா ஏற்பாடுகளுடனும், ஆபரேஷன் மேஜையை அனைவரும் சூழ்ந்தனர். ஒரு சிலர் ஏதோ தம் நினைவுகளில் மூழ்கிக் கிடந்தனர். மற்றும் சிலர் ஆபரேஷனுக்கு உதவியாக நடைபெறும் சில்லறைக் காரியத்துக்கே பெரிதாகப் பரபரப்புக் காட்டிக் கொண்டிருந்தார்கள். நோயாளிக்கு மயக்க மருந்து கொடுத்த பின்பு, வசந்தன் க்ளுகோஸ் ஸலைனை உயரே தொங்கவிட்டிருந்த பாட்டிலிலிருந்து சொட்டுச் சொட்டாக இரத்தக் குழாய்க்கு அனுப்பிக் கொண்டிருந்தான். இன்னொருவர் நாடித் துடிப்பு, இரத்த அமுக்கம் முதலியவற்றைக் கண்காணித்தார். சீலியா அடுத்துத் தர வேண்டிய இஞ்செக்ஷன்களை அஸிஸ்டெண்ட் கூறியபடி சொல்லிய நேரத்தில் கொடுத்துக் கொண்டே தயாராக நின்றிருந்தாள். மற்றக் கூட்டத்தினர் இந்தக் காட்சியை மனத்துள் பதித்து அநுபவம் பயின்று கொண்டிருந்தனர். குறிப்பிட்ட நேரத்தில் குழந்தையை எடுத்துவிட்டு, தையல் எல்லாம் முடித்ததும் அஸிஸ்டெண்ட் வெளியேறினார். 'அப்பாடா' என்ற பெருமூச்சோடு கடமையையும் நேரத்தையும் கழித்தவர்கள் காற்றுக்கு நடந்தார்கள்.

''என்ன பயங்கரம்?'' என்று சீலியா முணுமுணுத்தாள்.

''உங்களுக்கு அப்படியா தோன்றுகிறது? எனக்கென்னவோ நார்மலைவிட ஸிசேரியன் பரவாயில்லை என்று படுகிறது. அடேயப்பா! அப்போது தாய் படும் துன்பத்தைச் சற்று நீக்கி மயக்கம் தந்து குழந்தையை எடுப்பதால் என்ன துன்பம்? இதிலே ஒரே ஒரு வடுதான். வேறு எதுவுமில்லை.''

''மைகாட்! இதுவா பரவாயில்லை? இதில் எதுவுமே சரியில்லை என்று சொல்லுங்கள்.''

''ஓ! நீங்கள் பெண்ணாயிற்றே! வரப்போகும் துயரங்கள் கற்பனைகளாக பயமுறுத்துகின்றனவா?'' இப்படி வினையாட்டாகக் கூறிய வசந்தன் சட்டென ''எக்ஸ்க்யூஸ்மீ, டாக்டர்!'' என்றான்.

''நோ, நோ. நத்திங்!''

''என்னை மறந்த ஹாஸ்யம் இது!''

''இதில் தவறில்லையே. நீங்கள் கூறியது ஒரு விதத்தில் சரிதான். இந்த ஸிஸேரியனை நான் வெறுக்கக் காரணமே என் பிறப்புதான். நான் ஸிஸேரியனில் பிறந்தவள். என் தாயாரின் நினைவு வருகிறது......''

வசந்தன் நெகிழ்ந்தான். ''இந்தப் பிரசவ ஆஸ்பத்திரி, இந்தப் பிரசவக் கட்டில்கள் எல்லாம் ஓலமிடும் தாயை ஏந்திக் காக்கும் தியாகத்தின் கைகள்! எந்த ஆஸ்பத்திரியையும்விட இங்கு தியாகத்தையும், புனிதத்தையும் காண்கிறேன் நான்! அன்னையின் நினைவைத் தூண்டி அவள் தியாகத்தை நினைத்து அவளைத் தொழ வைக்கும் இடமில்லையா இது?''

''உண்மைதான் டாக்டர்! இந்தக் காட்சிகள் என் மனத்தை எப்படி நெகிழ்வித்து விடுகின்றன, தெரியுமா?''

''தெரியுமே! பெண் உள்ளம்....''

''பேதை உள்ளம் என்கிறீர்களா?''

'' அப்படிச் சொல்வேனா ஒரு கதாசிரியையை!''

'' நானா. கதாசிரியை? நல்ல வேடிக்கை!''

''அதை ஒப்புக் கொள்ள இத்தனை பயப்படுவானேன்? அது ஒன்றும் இழி தொழில் இல்லையே....!''

''தொழிலை இழிவு என்று சொல்லவில்லை நான்.....''

''பின்னே என்ன?''

''நான் எழுதினால் உண்மையை ஒப்புக் கொள்வேன்.''

''சரி. நான் அவசரப்படவில்லை. கட்டுங்கோம், பொறுத்திருப்போம். காலம் மாறும்!''

''எதற்கு?''

''உண்மை உருவம் தெரிய!''

சீலியா சிரித்துக் கொண்டாள். ''உங்களுக்குத்தான் எத்தனை ஆர்வம்!''

''கலைத்துறையினர் மீது சாதாரண மக்களுக்கு ஆர்வம் ஏற்படுவதில் விந்தை என்ன? ஆமாம், சங்கரன் உங்களுக்குச் சமயத்தில் உதவினானுமே?''

''ரொம்ப நன்றி அவருக்கு. முதலில் ஏற்பதா வேண்டாமா என்றுதான்

யோசித்தேன். பிறகுதான் அவர் உங்கள் நண்பர் என்று நினைவு வந்தது!'' என்றாள்.

வசந்தன் சட்டெனச் சீலியாவை நோக்கினான். இருவர் கண்களும் கண நேரத்தில் கூடிவிட்டு விலகிப் பிரிந்தன. வசந்தனின் தாகமான பகுதியில் குளிரான நீர் சொட்டு விழுந்தாற் போலிருந்தது. அதை மறைக்க எண்ணி அவன் 'நான் என்ன எழுத்தாளனா, எனக்கு அத்தனை மதிப்புக் கொடுக்க?' என்று கேட்டான். அவன் மனத்தில் தான் அவளைப் பற்றி ஓர் அபிப்பிராயம் எப்படி ஆலம் விதையென விழுந்து விட்டது !

நினைத்துப் பார்த்தால் வசந்தனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவன் மனம் கூட இப்படி தாகம் கொண்டு, சந்தர்ப்பம் ஏற்படும்போது சீலியாவோடு நட்புப் பாராட்ட முனைகிறதா ? வேடிக்கைதான் ! கடைசியில் அம்மா சொன்னது போல் அவனது பருவமும் கட்டுக்கோப்பை விட்டு விழித்துக் கொண்டதா? அன்னையின் துயர் சுமந்த முகம் நினைவில் கிளர்ந்ததுமே வசந்தனுக்குத் தன் மீதே வெறுப்பு ஏற்பட்டது. 'எத்தனை சுயநலம் பிடித்தவன் நான்? அங்கே அம்மா உயிருக்குப் போராடுகிறாள். இங்கே நான்..... சீலியாவின் எழிலில் லயித்துவிடுகிறேன் !' என்று மனம் கசந்து கொண்டான். அதோடு வழக்கத்தைவிடச் சற்று முன்பாகவே அன்னையைக் காணத் தாம்பரம் ஸானடோரியத்துக்குப் புறப்பட்டான். மின் வண்டியின் கூட்டத்தில் இடித்துப் பிடித்து ஏறி ஓரிடத்தில் அமர்ந்து கொண்டான். இதற்குள் கர்ப்பிணித் தாய் ஒருத்தி இடம் அகப்படாமல் நிற்பதைக் கண்டதும் மரியாதையாக எழுந்து தன் இடத்தை அவளுக்கு ஈந்தான். திறந்த ஏறுமிடத்தில் மேல் வளையத்தைப் பற்றிய வாறே வசந்தன் நின்ற போது மின் வண்டி நகர ஆரம்பித்தது. அப்போது ஓட்டம் ஓட்டமாக வந்த ஒரு பெண் வசந்தனின் பெட்டியில் ஏற முயன்றாள்.

''ப்ளீஸ் ஸிஸ்டர், இப்படி மூவிங் டிரெயினில் ஏற முயலாதீர்கள்,—ப்ளீஸ்'' என்று கத்திப் பார்த்தான். அவளோ கேட்பதாக இல்லை. தடுமாறி விழுந்துவிடுவாள் போல் இருக்கவே அவளது இரு கரங்களையும் பற்றி உள்ளே இழுத்தான் அவன். உள்ளே வந்தபின் ஆறுகப் பெருகும் வியர்வையைத் துடைத்து ஆசுவாசப்படுத்திக் கொண்டு, ''மிக்க நன்றி. மிக அவசரமாகப் போக வேண்டியிருந்ததால் உங்கள் புத்திமதியை ஏற்றுக் கொள்ள முடியவில்லை !'' என்றாள் அவள்.

''அவசரமானால் என்ன? இன்னும் 'மாக்சிமம்' பதினைந்து நிமிடங்கள் பொறுத்தால் அடுத்த வண்டி. நின்று நிதானித்துப் பெண்கள் பெட்டியில் ஏறினீர்களானால் உங்களுக்கும் நல்லது, எங்களுக்கும் நல்லது.''

யுவதி சிரித்துக் கொண்டாள். அவனது கோபம் அவளுக்கு விநோதமாக இருந்தது. ''நீங்கள் சொல்வது சரிதான். ஆனால் இந்த ஸிங்கிள் யூனிட் வண்டியில் பெண்களின் சிறு பெட்டியில் சாப்பாடு கொடுத்து விட்டுத் திரும்பும் கூடைக்காரிகள்தாம் தம் தட்டுகளுடன் உட்கார்ந்திருக்கின்றனர். நிற்கக்கூட இடம் இல்லையே....!''

அந்தப் பெண்ணின் பேச்சிலும் பொருள் இருக்கவே, வசந்தன் பதில் பேசவில்லை. சைதாப்பேட்டையில் அவனுக்கு உட்கார இடம் கிடைத்தது.

அன்னையின் நினைவில் ஆழ்ந்தவனை, அந்த நினைவு வண்டிக்கு முன் அன்னையிடம் கொண்டு போய்ச் சேர்த்தது.

''இந்த ஆஸ்பத்திரியில் சேர்ந்து இரண்டு மாதங்களாகின்றனவே! எப்போது என்னை டிஸ்சார்ஜ் செய்வார்கள்? அங்கே உன் அப்பா சாப்பாட்டுக்குத் திண்டாடிக் கொண்டிருக்கிறரே ! கீதாவின் வீட்டுக்கு அவர் எத்தனை நாள்தான் போய்க் கொண்டிருப்பது?'' என்றாள்.

''என்னம்மா தவறு ? நம்ம கீதாவின் வீட்டில் அப்பா சாப்பிட்டால் என்ன? முன்னைக் காட்டிலும் உன் உடம்பு எத்தனையோ குணமாகிவிட்டது. இன்னும் கொஞ்ச நாட்கள் பொறுத்துக் கொள்!'' என்றான்.

செல்லம்மா சிரித்துக் கொண்டாள். ''என் உடம்பைப் பற்றி எனக்குத் தெரியும். நேற்றுப் புதிதாக எக்ஸ்ரே எடுத்தார்கள். 'ஸ்பூடம்' டெஸ்ட் பண்ணினார்கள்.... மறந்துவிட்டேனே வசந்த்! நீ வந்தால் தம்மை வந்து பார்க்கும்படி டாக்டர் கூறினாரடா!''

வசந்தன் ஓட்டமும் நடையுமாக டாக்டரைக் காணச் சென்றான். அவனை வரவேற்ற டாக்டர் உட்காருமாறு கூறிவிட்டுச் செல்லம்மாவின் எக்ஸ்ரேயை எடுத்து 'லாபி'யில் பொருத்திக் காண்பித்தார். அடுத்து வேறு சில குறிப்புக்களையும் பார்வையிட்டான்.

யாருடைய நினைவு அவன் உள்ளமெல்லாம் நிறைந்திருந்ததோ அவள் நிலையை உணர்ந்தபோது அவன் கண்கள் குளமாயின. **(தொடரும்)**

**பின்னி டவல்கள் பல வெளிநாடுகளில் புகழ்பெற்றவை. இப்போது மிகவும் சகாயமான விலையில் உங்கள் தேவைக்கு எளிதில் கிடைக்கின்றன**

மிருதுவானவை; விரைவில் ஈரம் உறிஞ்சுபவை. கெட்டிச்சாயம் உள்ளவை; நீடித்து உழைப்பவை. பல வசீகர வண்ணங்கள், சைஸ்கள், டிசைன்கள்.

உங்கள் பணத்திற்கேற்ற மதிப்புள்ளவை.

டர்க்கிஷ் பாத் டவல்கள்,
ஃபேஸ் டவல்கள்,
ஜாக்கார்ட் டவல்கள்,
கேண்டி-ஸ்ட்ரைப் டவல்கள்,
பேபி நாப்கின்கள்.




**பின்னி - துணி உலகிலே புகழ்பெற்ற பெயர்**

BY4547

# பொன்னிவனத்துப் பூங்குயில்

கொத்தமங்கலம் சுப்பு

அத்தியாயம் 19

## 'உள்ளமும் வெள்ளமும்'

"கடலை நீந்தியவனும் மணலைத் தாண்ட முடியவில்லை" என்பார்கள். மாயனுக்கும் ஓவியபணிக்கும் சிக்காத குயிலி ஒரு காரணமும் இல்லாமல் கூட்டத்தால் துரத்தப்பட்டாள். 'திருடி திருடி' என்று முதலில் கத்திய பெண் பிள்ளை இரண்டு எட்டில் தாவி ஓடிக் குயிலியைப் பிடித்துக் கொண்டாள்.

"ஐயோ சின்னம்மா!" என்றாள் குயிலி.

"ஆமா உங்க சின்னம்மாதான். நீ தப்பிச்சிட்டு ஓடினா ஒன்ன விட்டுடுவாங்களா" என்று ஆத்திரத்தோடு இரைந்தாள் சின்னம்மாள்.

இதற்குள் கூட்டத்தில் இருந்த ஒரு பெண் பிள்ளை குயிலியை அடிக்கக் கையை ஓங்கினாள்.

"என்னத்தை எடுத்தா? சழுத்துச் சங்கிலியா? கைக் காப்பா?" என்று ஒருவர் ஆத்திரத்தோடு கேட்டார்.

நல்ல வேளையாகச் சின்னம்மாள் இரைந்த இரைச்சலில் அவர்கள் குயிலியை அடிக்காமல் விட்டார்கள்.

"நாங்க ஏனய்யா திருடறோம்?" என்றாள் சின்னம்மா.

குயிலிக்குத் தன்னைச் சுற்றிலும் ஒரு பெரும் கூட்டம் நிற்பதைப் பார்த்தவுடன் என்ன செய்வது என்றே புரியவில்லை. திருதிருவென்று விழித்தாள். 'இங்கு கூட்டம் கூடி இருப்பதைப் பார்த்து மாயனும் பஞ்சவர்ணனும் வந்துவிடுவார்களோ? சித்திரக்காரர் திரும்பிப் பார்த்தால் ஆ'த்தாயிற்றே!' என்ற எண்ணம் வந்தது. குயிலியின் கண்கள் கூட்டத்தின் வெளியே நோக்





கின. அங்கு ஒரு வளையல் கடை இருப்பதைக் கண்டாள். சமயத்துக்கு உதவாவிட்டால் சாகசம் இருந்துதான் என்ன பயன்? குயிலி விசும்பி அழ ஆரம்பித்தாள். நான் உங்களைத் தேடிக் கொண்டுதான் அலைஞ்சேன். ஆனால் நீங்க என்னைத் திருடிங்கிறீங்க. அம்மாவே திருடி என்று என்னைச் சொன்னால் ஊரார் ஏன் சொல்ல மாட்டாங்க? என்னை எல்லோரும் அடிக்கட்டும். கொல்லட்டும்'' என்றாள் குயிலி.

''நீ எதுக்கு என்னைத் தேடினே?'' என்றாள் சின்னம்மா.

''வளையல் கடைக்குப் போனேன். நல்ல வளையலாக இருந்தது. சின்னம்மாவுக்குப் போடாம எனக்கு மட்டும் போட்டுக்க மனசு வரலே. நாலே நாலு வளையல்தான் போட்டுக்கிட்டேன். இதோ, பாருங்க'' என்று தன் இரு கைகளையும் காண்பித்தாள், குயிலி. அவற்றில் புதிதாகக் காலையில் அடுக்கப்பட்டிருந்த நான்கு வளையல்களைக் கண்டதும் சின்னம்மாவை ஆசை வளைத்துக் கொண்டது.

''வளை வாங்கற காசை எங்கிட்டே கொடு. நானே வாங்கிப் போட்டுக்கிறேன்'' என்றாள் சின்னம்மா.

''நான் தரமாட்டேன். நீ வளை போட்டுக்க மாட்டே. வடை வாங்கித் தின்னுவே'' என்று குறும்பாகக் கூறிக் கொண்டே குயிலி நடந்தாள். சின்னம்மா விடுவாளா? அவள் கையை டபக்கென்று பிடித்துக் கொண்டு கூடவே தொடர்ந்தாள்.

''இந்தா, சில்லறையை என் கையிலே கொடு'' என்றாள் சின்னம்மாள்.

''நீ என் கையை விடு.''

''விட்டா ஓடிப் போய் விடுவே. கூரையைப் பிரிச்சுட்டு ஓடலாங்கிற எண்ணத்தை உனக்கு யார் கொடுத்தது?'' என்று கேட்டாள்.

''தெய்வம்தான். கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிய்ச்சுக்கிட்டுக் கொடுக்கும்னு சொன்னாங்கில்லே. உங்களுக்கு நம்ம வீட்டுக்குள்ளேயும் மானம் வந்துடுத்தேன்னு கவலை'' என்றாள் குயிலி.

''அப்படி ஒருத்தரும் இங்கு மானம் கெட்டு வாழலே'' என்றாள் சின்னம்மா.

பேச்சுவாக்கில் குயிலியின் கையை அவள் விட்டு விடவே குயிலி விருட்டென்று ஓரடி எடுத்து வைத்தாள். சின்னம்மாளோ பேய்ப்பிடியாக அவள் கையைப் பிடித்துக் கொண்டாள்.

''கையை விடுங்கம்மா. வலிக்குது.''

''நீ காசைக் கொடு.''

''சரி, வா. உனக்கு வேணும்கிற வளையலை அடுக்கிக்கோ. நான் காசைக் கொடுக்கிறேன்'' என்று சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டுச் சின்னம்மாவுடன் வளையல்காரன் முன் போய் நின்றாள் குயிலி.

பட்டு வளையல்களும், கங்கணங்களும் கண்ணைப் பறித்தன. ஓர் ஊர்வலம் ஆயிரம் ஊர்வலங்களாக அந்தக் கங்கணக் கண்ணாடிகளில் தெரிந்தன. சின்னம்மா வளையல்களைத் தேர்ந்தெடுத்தாள். அவளுடைய ஒரு கண் வளையல் மீதும் மற்றொரு கண் மகளின் மீதும் இருந்தன. அத்தனை இனுசு வளையல்கள் அங்கு இருந்தும் சின்னம்மாளுக்குத் தேர்வில் திருப்தி ஏற்படவில்லை. வளை பிடித்தால் விலை பிடிக்கவில்லை. விலை பிடித்தால் வளை பிடிக்கவில்லை. ஒரு மாதிரியாக நான்கு ஜோடி வளையல்களைத் தேர்ந்தெடுத்தாள் சின்னம்மா. அவளுக்குப் பக்கத்தில் நின்ற குயிலி, ''இன்னும் வேணுங்கிறதை வாங்கிக்க சின்னம்மா'' என்று கொஞ்சினாள்.

''கையை நீட்டுங்க'' என்றார் வளையல்காரர்.

குயிலியைப் பிடித்திருந்த கையை விட்டுவிட்டுச் சின்னம்மா தன் கையை வளையல்காரரிடம் நீட்டினாள். வளையல்காரர் அவள் கையை இறுகப் பிடித்துக் கொண்டு ஒவ்வொரு வளையலாக

இட்டார். குயிலி தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டாள்.

''அது என்ன மாம்பழக் கடையா?'' என்று சொல்லிக் கொண்டே மெதுவாக நடந்தாள். சின்னம்மா கையை அசைத்தாள்.

''கையை அசைக்காதேம்மா. வளை ஒடிஞ்சு போகப் போறது'' என்று அவள்



கையை மேலும் இறுகப் பிடித்தார் வளையல்காரர்.

குயிலி பறந்து விட்டாள். வளையல்காரரோ சின்னம்மாளின் கையை விடாமல், ''காசைக் கொடுத்து விட்டுப் போ'' என்று இறுகப் பற்றிக் கொண்டார். வேறு யாராவது கையைப் பிடித்துக் கொண்டிருந்தால் 'ஐயோ, கையைப் பிடித்து இழுக்கிறானே' என்று கத்தலாம். வளையல்காரர் பிடித்து இழுத்தால் எப்படிக் கத்துவது?

''ஐயோ, கையை விடுய்யா. கையை விடுய்யா! அந்தக் குட்டி தப்பி ஓடிப் போச்சு, அடிக்கணும்'' என்றாள் சின்னம்மா.

''அதுக்காக நீ வளையலையும் எடுத்துண்டு ஓடறேங்கிறியா'' என்று சொல்லிக் கொண்டே மிக ஜாக்கிரதையாக வளையலைக் கழற்ற ஆரம்பித்தார் வளையல்காரர்.

இதற்குள் குயிலியும் அவள் கூட்டத்தினரும் சிவகங்கைத் தோட்டத்துக்கு ஓடிவிட்டார்கள். ''நாமக்காரர் இலேசில் விடமாட்டார் கையை'' என்று சிரித்தான் சின்னத் தம்பி.

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்...இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக்கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**

புதிய, நவீன காஸ்மெடிக் டின்!







**மற்றும் பாமாலிவ் டால்க் டீலக்ஸ் — மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை**

PT.G.B TAM.

"வளையல் என்றவுடனே என்னைப் பிடித்திருந்த கை எப்படி அந்தப் பக்கம் போச்சு, பார்த்தியா?" என்று நகைத்தாள் குயிலி.

தஞ்சம் என்னும் பெயர் உடைய அரக்கன் ஒருவன் நகர மக்களைக் கொடுமைப்படுத்தினான். அம்பிகை அவனைக் கொன்று மக்களுக்குக் களிப்பை உண்டாக்கினாள். அதனால் ஆனந்தவல்லி என்னும் பெயரோடு அங்கு ஆராதிக்கப்பட்டு வருகின்றாள். அரக்கன் இறக்கும் பொழுது என் பெயரே இந்த நகருக்கு இட வேண்டும் என்று கேட்டுக் கொண்டானாம். அதனால்தான் அந்நகருக்குத் தஞ்சாவூர் என்ற பெயரும் வரலாயிற்றாம். அதே அரக்கன் என் பெயர் கொண்டு வந்தவர்களை என்னைக் கொன்றது போல் கொல்லக் கூடாது என்றும் கேட்டுக் கொண்டான் போலும். தஞ்சம் என்று வந்தவர்களைத் தள்ளாத ஊர் ஆதலால் தஞ்சாவூர் என்ற பெயரும் வந்திருக்கலாம். நெற்களஞ்சியமாக விளங்கும் நகர் ஆதலால், அங்கு பட்டினிச் சாவு, பட்டினியால் ஏற்படும் பிணிகள் முதலானவை இல்லாமல் பிறந்தவர்கள் நெடுங்காலம் வாழ்ந்து இயற்கையாக மரணம் அடைவதால் தஞ்சாவூர் என்ற பெயர் பொருந்தியிருக்கலாம்.

அத்தகைய தஞ்சாபுரியின் குல தெய்வம் ஆனந்தவல்லியே.

நாம் அவள் எல்லை அறியப்ப
டா நல கோலத்தனளாம்
சாமள வல்லி சதானந்த
வல்லி சதுர் மறைக்கே
யாமள வல்லி இமையாத
வல்லி இமய வல்லி
கோமள வல்லி இவளின
ளே நங்குல தெய்வமே

என்னும் அரிய தோத்திரத்தை விண் ஆற்றங்கரையில் உள்ள ஆனந்தவல்லி அம்மனின் சந்நிதியில் ஓதுவாமூர்த்திகளும் சக்கரையும் மோகனராகத்தில் அருமையாகப் பாடினார்கள். மன்னரும் இளவரசரும். இளவரசர் பிரதாபசிம்மரும் இதைக் கேட்டு மெய்ம்மறந்து நின்றனர். பத்தினிமார்களின் நடுவில் நின்ற பாவாஜி ஏவல், பில்லி, சூனியம், மந்திரம், மாரணம் முதலானவை தன்னை அணுகக் கூடாது என்று பிரார்த்தித்துக் கொண்டார். என்றைக்கேனும் ஒரு நாள் என்னை அரசியாக்கினால் உனக்குப் பொன் அங்கி சாத்துகிறேன் என்று துறுவராய் வேண்டிக் கொண்டாள். இவ்வாறு அர்த்தசாம தரிசனம் முடிவுற்றது. ஊர்வலம் அத்துடன் கலைந்தது. ஒவ்வொருவராகப் புறப்பட்டனர். மன்னரும் இளவரசர் பிரதாபசிம்மரும் இரவு நெடுநேரம் ஆகிவிட்டதால் குதிரைகள் மீது அமர்ந்து மெய்க் காவலர்கள் புடைசூழ அரண்மனையை நோக்கி விரைந்தனர்.

என்றைக்குமே மதி எழில் மிகுந்ததுதான். ஆனால் மார்கழி மதிக்கு ஒரு தனி அழகு உண்டு. என்றைக்குமே மங்கையர்கள் அழகுடையவர்கள்தான். ஆனால் — களிப்பு வந்தால் மங்கையர்க்கு ஒரு தனி அழகு உண்டு. மாமரத்தைக் கொடி சுற்றுவதைப் போல் தன் கையால் மரத்தைத் தழுவிக் கொண்டு குயிலி நின்றபோது அவளுக்கு அருகில் இருந்த பையன்கள் எல்லோரும் சந்திரனைப் பார்த்துத் தாரகைகள் கண் சிமிட்டுவதைப் போல் அவளைப் பார்த்துக் கொண்டே நின்றார்கள். ஆனால் குயிலியோ ஒன்றையும் பாராமல் நின்றாள். அவள் மனத்தில் ஒரே யோசனை. உள்ளம் நிறைந்தால் உலகம் மறைந்துவிடும் அல்லவா? குயிலியின் மனத்தில் ஒரு யோசனை வந்தது. "நான் அவரைப் பார்த்தேன். அவர் என்னைப் பார்த்திருப்பாரா?" என்ற வினாதான் அது. 'அவர் என்னைப் பார்த்திருந்தால் என்ன நினைத்திருப்பார்?' குயிலி ஒரு முறை தன்னைத் தானே பார்த்துக் கொண்டாள். முதன் முதலில் அவளுடைய கண்ணில் பட்டது — பாவம், பரிதாபம்!—பாவாடையில் இருந்த தையல்தான். இந்தத் தையலைப் பார்த்தவுடனே அந்தத் தையலின் மனமே எரிந்தது. இதை அவர் பார்த்திருப்பாரோ? என்ன எண்ணியிருப்பார்? இவள் ஏழையிலும் ஏழை என்று எண்ணியிருப்பார். அவர் கண் முன் இக்கோலத்துடன் நான் பட்டிருக்கவே கூடாது என்று எண்ணினாள்.

குயிலிக்கு அவளை அறியாமலேயே ஒரு பெருமூச்சு வந்தது. அடுத்தாற்போல் அவளுடைய மனதில் தன்னை ஒரு முறை நன்முகக் கண்ணாடியில் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று தோன்றியது. முகம் பார்க்கவே கண்ணாடி கிடைக்காதவளுக்கு முழுவதும் பார்த்துக் கொள்ள நிலைக்கண்ணாடி ஏது?

தேங்கிய தண்ணீர்தான் ஏழைகளுக்குத் தெய்வம் கொடுத்த கண்ணாடி. சிவகங்கைத் தோட்டத்தில் உள்ள சிறு பொய்கைக்குப் பக்கத்தில் போய் நின்றாள். இருந்தாலும் 'இந்தப் பங்கமயமான உருவத்தைப் பார்க்கவும் வேண்டுமா?' என்று தனக்குள்

ளேயே வெட்கமும் பட்டுக் கொண்டாள். ஆசை பிடித்துத் தள்ளவே அதன் கரையில் - போய் உட்கார்ந்து தன் முகத்தைத் தண்ணீரில் பார்த்துக் கொண்டாள். குட்டிக்குத்தான் மனத்தில் யோசனை! குளத்துக்கு என்ன யோசனை வந்தது? பொய்கை நீரில் சிறு காற்று மோதியதால் குயிலியின் முகத்தின் நிழல் குதூகலமாகத் துள்ளிக் கொண்டே இருந்தது. வெயிலில் வாடி வதங்கியிருந்த முகத்திலே தனியாக ஒரு கறுப்பு தெரிந்தது. அடேயப்பா! இந்தக் கரிய முகத்தை அவர் பார்த்திருப்பாரோ? திருவிழாவுக்கு எல்லோரும் வந்தார்களே! எப்படி எப்படி அழகு செய்துகொண்டு வந்தார்கள்? ஒருத்தி தலையை வாரி, பூ வைத்துக் கொண்டிருந்தாள். மற்றொரு பெண் தன் தலையைச் சீவித் தாழம்பூ வைத்துத் தைத்திருந்தாள். இத்தனை பேர்களுக்கு நடுவில் அவர் என்னை எங்கே பார்த்திருக்கப் போகிறார்? அந்தக் கண்களில் இந்த அழகு பட்டிருந்தால் அவர் தான் உடனே கண்களை மூடிக் கொண்டிருப்பாரே? தாமரைப் பூ மேலே வண்டுகள் அமர்ந்தது போல் அவர் கண்கள் திறந்துதானே இருந்தன! அவர் என்னைப் பார்த்திருக்கவே மாட்டார்... அப்படி அவர் பார்க்கிறப் போலே என்னிடம் என்ன அழகு இருக்கிறது? 'அஞ்சன மை கறுப்பு நான்.' குயிலி சிரித்தாள். 'ஆனால் வஞ்ச மனக் கறுப்பில்லை' என்று தனக்குத் தானே ஓர் ஆறுதலும் சொல்லிக் கொண்டாள்! அவருக்கும் எனக்கும் எட்டேணி வைத்தாலும் எட்டாது. அவர் குதிரைமேல் இருப்பவர். நானோ குதிங்கால் தேய நடப்பவள். அவரைச் சுற்றி ஆயிரம் பிரபுக்கள். நானோ பணக்காரர்களைச் சுற்றித் திரிபவள். அவர் ஏன் என்னைப் பார்க்க வேண்டும்? அடி அசட்டுப் பெண்ணே. அவர் உன்னைப் பார்த்தால் என்ன, பார்க்கா விட்டால் என்ன? நீ அவரைப் பார்க்கக் கொடுத்து வைத்தாயே, அதற்காகச் சந்தோஷப்படு. சே! நீயும் ஒரு பெண்ணா? உன்னை அவர் திரும்பியாவது பார்ப்பாரா? ஒவ்வொரு வீட்டிலும்தான் எத்தனை பெண்கள் நின்றார்கள்? சாளரங்கள் எல்லாம் சந்திரனாகத் தெரிந்ததே? ஆனால் அவர் சுத்த வீரனல்லவா? மெத்தைப் பக்கம் திரும்பியாவது இவுளுகளைப் பார்த்தாரா? ஏன் பார்க்கிறார்? இவுங்க குணம் அவருக்குத் தெரியாதா?

'யார் யாரைப் பார்த்தால் நமக்கென்ன? நமக்குத்தான் இதெல்லாம் பிடிக்காதே. வேடிக்கை பார்க்கப் போனோம். அவர் நம்ம கண்ணில் பட்டார். பட்டதனாலே பார்த்தோம். இல்லாவிட்டால் இதற்கென்று வரிந்து கட்டிக் கொண்டு பார்க்கவா போகிறேன்? என் அழகு எனக்குத் தெரியாதா? கறுப்பு... கையிலே வேறு ஒரு வடு. மேலாக்கிலே மூணு தையல். என்னை அவர் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட நான் முட்டாளா? நல்ல நிலா; நல்ல காற்று. ஏதோ எல்லாரையும் போல் நீயும் கூட நின்று விட்டுப் போனியா... நிலவை நெஞ்சிலே கட்டிக்குவாங்களா? காற்றைக் கண்டாங்கியில் முடிஞ்சுக்குவாங்களா? அப்படி ஆசைப்பட்டா அது நடக்கிற காரியமா?' இவ்வாறு அவள் நெஞ்சம் நிழலைப் பார்த்து எண்ணியபோது குளக்கரை மரத்தில் இருந்து ஒரு காக்கை ஒரு வில்வப் பழத்தைப் பொத்தென்று தண்ணீரில் போட்டது. நிழல் கலைந்தது. நெஞ்சம் குலைந்தது. சரேலென்று முகத்தில் அடித்த தண்ணீர் அவள் கண்ணருகில் கண்ணீரைப் போல் வடிந்தது. குயிலி நெடுமூச்செறிந்தாள்.

'பீரங்கியைப் பார்த்தோம். துப்பாக்கியைப் பார்த்தோம். ஆனையைப் பார்த்தோம். குதிரையைப் பார்த்தோம். அதைப்போல் அவரையும் பார்த்தோம். இவ்வளவுதானே? இதையே மனசில் எண்ணிக் கொண்டு இருந்தால், நம்மை இந்தப் பையன்கள் என்ன நினைப்பாங்க? என்ன சொன்னான் சின்னத்தம்பி? அந்தத் துக்கோஜி மகாராஜாவுக்குப் பத்துப் பெண்டாட்டி. யானை மேலே வந்தவருக்கு ஒன்பது பெண்டாட்டி. அவங்க பெரியப்பா ஷாஜி மகாராஜாவுக்குப் பதினாறு பெண்சாதிகள் என்று சொன்னானே! இவருக்கு எத்தனை பெண்சாதி இருப்பாங்களோ? இவங்கதான் பெண்களைக் கண்ணாலே கண்டா விட மாட்டாங்களாமே?' குயிலியை உடனே ஓர் அச்சம் பற்றிக் கொண்டது. 'அரண்மனை சங்காத்தமே உதவாது. அதில் போய் ஒரு பெண் சிக்கிக் கொண்டால் அவள் ஜன்மமே தீர்ந்தது. மூடு பல்லக்கு, முகத் திரை, வேளைக்குச் சோறு போட்டு விலங்கில்லாத கைதியாக வைத்து விடுவார்கள்' என்று நினைத்தாள். அந்தப்புரப் பெண்களிடம் அவளுக்கு ஒரு கருணை பிறந்தது. 'நமக்கு ஏன் இந்தக் கவலை? நான் ஏன் அரண்மனைப் பக்கம் போகிறேன்? நான் என்ன அம்புட்டு அழகியா?' என்று குயிலி தானே சிரித்தாள். அவள் மனமே அவளைப் பார்த்து நகைத்தது. அவளது நரம்புகளில் ஏதோ சந்தோஷ

வெள்ளம் பரவியது. அவன் குரலில் ஏதோ இனிமை ஏறியது.

இரவு நடுநிசி. மணிமுத்தா நதியின் கரை போல் உடைந்த பரிசலில் குயிலியும் அவளுடைய பரிவாரமும் இருந்தார்கள். திடீரென்று அத்தனை நட்சத்திரங்களும் குயிலியின் அருகே வந்தன. தெருவில் சென்ற ஓரிருவர் அங்கங்கே நின்றார்கள். பார வண்டியில் பூட்டிய மாடுகள் தங்கள் கழுத்தில் கட்டிய மணிகளைச் சிறிதும் ஆட்டாமல் காதுகளை நீட்டிக் கொண்டு எதையோ கேட்டன. ஆற்றின் கரையோரமாக முளையடித்துக் கட்டப்பட்டிருந்த பசுக்கள் அசை போட மறந்து நின்றன. ஆம். குயிலி பாடுகின்றாள். இசையை எழுத்தால் எழுத முடியுமா? இறைவனைச் சிலைக்குள் அடக்க முடியுமா? அதே போலக் கண்டத்தின் வழியே வரும் இசையமுதத்தை நாவால் சொல்ல முடியுமா?

ஆணைப்பட்ட பாரதியாரே இசையின் பெருமையை எழுத முடியாமல் தவித்திருக்கிறார். ''பாட்டின் சுவையதனைப் பாம்பறியும், காட்டு விலங்கறியும், கைக் குழந்தை தானறியும்'' என்று பாடினாரே யல்லாமல் இதை மனிதனால் அறிய முடியும் என்று எங்கே சொன்னார்?

இசை தரும் இன்பம் நாவால் சொல்ல முடியாத இன்ப உணர்ச்சி ஆதலால்தான் தலையை ஆட்டி இசையை ரசிக்கிறோம். 'பேஷ்', 'ஆகா' என்று பொருள் கடந்த சொற்களால் போற்றுகின்றோம்.

''கண்டாரும் விண்டாரும் கிடையாது'' என்று இசைப் பயனை வெல்ல முடியாமல் நந்தனாரே திணறி இருக்கும் பொழுது நான் எம்மாத்திரம்?

அண்ட கோளத்தை ஆட்டி வைக்கும் சக்தி இசைக்கு இருக்கிறது. பாம்பும் புலியும் பாடும் பாட்டைக் கேட்டு இறைவனே தில்லையில் ஓயாது ஆடுகிறான் என்றால் கேட்பானேன்?

எல்லையில்லாத இசையின் பயன்தான் நமசிவாயம். நமசிவாயம் என்று ஓதுவது இசை மயமே யாகும். இவ்வுலகிலே பாட்டு, பாட்டு, பாட்டு. ஆம்! குயிலி அவ்வாறு என்னதான் பாடினாள் என்று கேட்பவர்கள் இனி நடராஜ மூர்த்தி என்ன ஆடுகிறார் என்றும் கேட்பார்கள். பதமா, ஸ்வரஜதியா, வர்ணமா, அலாரிப்பா, ஜாவளியா, தில்லானாவா என்றுகூடக் கேட்பார்கள். இந்தக் கணக்குக் கெல்லாம் அப்பாற்பட்டது இல்லை ஆட்டம். அதைப் போல் எல்லையற்றதே குயிலியின் இசை. பாஷை பிறந்ததே அம்பலவன் பாதச் சிலம்பில்தான் என்றால் பாட்டின் பிறப்பை எப்படி வர்ணிப்பது?

நமது ஆட்டமும் ஓட்டமும் நடராஜா ஆட்டமும்தான் சாரணி. உள்ளும் மேலும் ஓடும் மூச்சுகள்தான் அனுசாரணி. நாபிக்கமலம்தான் மந்திரத்தின் கேந்திரம். நம் உடலே நம் பூர். நாம் நாத மயம். குயிலி பாடியது யாருடைய உருப்படி? உருப்படி இசையாகிவிடுமா? படித்துறை ஆறு ஆகிவிடுமா? இசைப் பொய்கையில் இறங்க ஒரு படிதான் உருப்படி.

பாட்டுக் கச்சேரியை நாம் வர்ணம், நிரவல், ராக ஆலாபனம், இராகம், தானம், பல்லவி, சில்லறை உருப்படி என்று பிரித்து வைத்திருக்கிறோம். வர்ணம் என்பது ஏழு வர்ணக் களஞ்சியம். ஒரு ராகத்துக்குத் தாளம் என்ற சேலையைக் கட்டி ஆட விடுவதுதான் வர்ணம். இருந்தாலும் கமலாட்சி வர்ணத்துக்குள் காம்போதி ராகம் முழுவதும் அடங்கிவிடுமா? எழுதிய சித்திரத்துக்குள் இறைவன் அடங்கி விடுவாரா? இசைத் தேனில் மொழியைக்

மாடர்ன் ஆர்டிஸ்ட் மருதாசலம்

3













குழைத்து இறைவனுக்கு அர்ப்பணம் செய்வதுதான் கீர்த்தனம். நம் மகான்கள் செய்த கீர்த்தனைகள் இல்லையென்றால் இத்தனை ராகங்களும் உயிரோடு இணைந்திருக்காது. நினை மாலைப் போல் கர்நாடக இசை இருந்திருக்காது. ஆற்றுக்குக் கரை கட்டிவிட்டது போல் கண்டவர் கண்டபடி பாடாமல் கட்டிய கரைதான் கீர்த்தனம். கரையே காவிரியாகி விடுமா? பட்டைச் சாதத்துக்குள் பரம்பொருள் அடங்கிவிடுமா?

குயிலி பாடியது கீர்த்தனமுமல்ல. இராகம்தான் இசையின் மூச்சு. சொற் கடந்த ஒருவனைச் சொற் கடந்த ஒன்றால் தோத்தரிப்பதுதான் இராகம். ஆனால் அதிலும் அவரோகணம் என்று ஒன்று இருக்கிறதே. அவரோகணமே இல்லாதவன் அல்லவா இறைவன்?

தானம்தான் ராகத்தின் நயங்களை எடுத்துக் காட்டும் கருவி. அதில் கனம், ஜயம், பிரு, கரு, கனிவு, கனிசம் எல்லாம் இருக்கும். ஆனால் அதிலும் கணிதம் இருக்கிறதே. கணக்கில் அடங்காதவன் அன்றோ இறைவன்?

குயிலி பாடியது ராகம், தானம் பல்லவி அல்ல. அது வர்ணமும் அல்ல. அது வேறு என்ன? அதுதான் நாதம், நாதம், நாதம்.

கவிதைக் காவின் அரசரான ஆதிகவி வால்மீகியை சிம்மத்துக்கு ஒப்பிட்டார்கள். ஆனால் அவருடைய இசையைப் புகழும்போது என்ன சொல்கிறார்கள்? கவிக் கிளையில் இருந்து 'ராமா, ராமா' என்று மதுர அட்சரத்தைக் கூவும் கோகிலம் என்கிறார்கள். அதுதான் குயிலியின் குரலிலும் இருந்தது.

குயிலியின் குரல் இனிமையைத் தருகிறது. குரலைக் கேட்டேதான் கழுதையைத் திட்டுகிறோம். ஆனால் சாரீர வளம் என்பது சரீரம் எடுப்பதற்கு முன்பே செய்த புண்ணியத்தின் பலன். தெய்வம் கொடுத்ததை ஆராய நமக்குத் திறமை ஏது?

ஆனந்தவல்லி ஆலயத்தில் அர்த்த ஜாம தரிசனம் முடிந்து அரச ஊர்வலம் கலைந்தது. நான்கு மெய்க்காப்பாளர் புடைசூழ அரசரும் இளவரசரும் அரண்மனை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

''பிரதாபா! இந்தக் குரல்தான் இசை நூல்'' என்று பகர்ந்தார் 'சங்கீத சாராம்ருதம்' என்னும் இசை நூலை எழுதிய அரசர்.

ஆனால் தந்தையின் பேச்சைக் காட்டிலும் அந்தச் சாரீரம் இனிமையாக இருந்ததால்தானோ என்னவோ, பிரதாபர் தலையை மட்டும் ஆட்டினார்.

தந்தை மகன் இருவரும் அந்த கந்தர்வ கானத்தில் மெய் மறந்திருந்த போது,

''பேரிகை அதிர்ந்து வர,
பின்னாலே மன்னர் வர,
மாநிறக் குதிரையிலே,
மன்மதன் வந்தானடி.

ஏறும் பரி அழகா
இளவரசர் தானழகா
வானத்துச் சந்திரனே நீ
வாய் திறந்து சொன்னால் என்ன?

பார்த்தால் பசி தீரும்
பாடினால் வாய் மணக்கும்
நேத்திரம் கொள்ளாமல் - அழகு
நெஞ்சில் நிறைந்ததடி!''

என்று கான மழையைக் கொட்டினாள் குயிலி. இதைக் கேட்டு ஆனந்தக் கண்ணீர் மழையைக் கொட்டினார் தந்தை. பிரதாப சிம்மரோ வெட்கத்தால் அந்தக் குளிரிலும் முகத்தில் வியர்வை அரும்பி நின்றார்.

'அவள் யார்? அருகில் நெருங்கிப் பார்க்க வேண்டும்' என்ற அவா ஏற்பட்டது. ஆனால் அருகில் தந்தை நிற்கும்போது தான் அவ்வாறு செய்வது சரியல்ல என்றும் தோன்றியது. நாத மயமான இந்த உலகத்திலே இறைவன் என்னென்ன அற்புதங்களைச் செய்கிறான்! குயில், கருடன், கிளி, புலி, செம்போத்து, காக்கை, கரடி என்று ஒலியைக் கொண்டே உருவத்தைப் புரிந்து கொள்ளும் வண்ணம் அந்த ஒலிக்கும் அல்லவா உருவம் கொடுத்திருக்கிறான்.

''இது யாருடைய குரல்? முன்பே இதைக் கேட்டிருக்கிறோமே? ஆம்! அவளேதான்! 'ஏய்! ஏய்!' அவளேதான்!'' என்று புரிந்து கொண்டார் இளவரசர். அவருடைய மனம் கால்களை முன்னே தள்ளியது. மானம் கால்களைக் கட்டியது.

மழை பெய்தால் ஆறு பெருகாதா? அரசர் விஜயம் செய்வதற்காக மணிமுத்தாற்றின் மதகை அடைத்துவிட்டிருந்தார்கள். ஆற்றில் கணுக்கால் அளவு தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. தந்தையும் மகனும் நின்று பாட்டைக் கேட்டுக் கொண்டிருந்தபொழுது தட தட என்ற சப்தம் கேட்டது. அரசரின் குதிரை கனைத்தது. இதற்குள், ''குயிலி! வெள்ளம்! வெள்ளம்!'' என்று அலறினான் சின்னத்தம்பி.

டோலக்கைக் குயிலியின் பக்கம் எறிந்தான். குயிலி வெள்ளத்தால் இழுத்துப் போகப்பட்டாள். பிரதாப சிம்மர் குதிரையைக் கரையோரமாக விரட்டிக் கொண்டே சென்றார். மன்னரோ ''வஞ்சகம்! சூழ்ச்சி!'' என்று கத்திக் கொண்டே ஆற்றின் மதகை நோக்கி அவசரமாக விரைந்தார். (தொடரும்)






தடையென்ன? தலையில் அடித்தால் சாரல்
தாங்க முடியும்! அத்தகைய கட்டுறுதி.
சூடு காப்பதில் ஒப்பிலாப் பண்பு.
பலநோக்கத் திறன், அழகுவடிவ டிசைன்—
இவைதாம் 'ஸன்' வேக்வம் ஃப்ளாஸ்க்
தரும் தன்மைகள்!

எவரையும் கவரும் விலைநயத்தோடு,
எங்கும் கிடைப்பதாய்—'ஸன்' பிராண்டு
ஃப்ளாஸ்குகள், கூஜாக்கள், ஜாடிகள்
ஆகியவற்றை விக்டரி ஃப்ளாஸ்க் கோ., மேலும்
அதிக அளவிலே தயாரிக்கப்போகிறது:
ஆகவே, ஒன்றுக்கு மேல் நீங்கள் வைத்துக்
கொள்ளலாம்—கோலாகலமாக இன்புறலாம்!



எவ் வேளையிலும்...எங்கும்...




**வேக்வம் ஃப்ளாஸ்க்**
உங்களுக்கு மேம்பட உதவும்

**விக்டரி ஃப்ளாஸ்க் கோ. பிரைவேட் லிட்.,**
பம்பாய் . கல்கத்தா . டெல்லி . சென்னை . ஹைதராபாத்

*இந்தியாவின் முதல் வேக்வம் ஃப்ளாஸ்குகளைத் தயாரித்தோர்—*
*இன்றும் முதன்மை வகிப்போர்!*

# அடுத்தவீட்டு அசட்டு நாய்!





மனிதர்களில் அசடு சமர்த்து இருப்பது போல, நாய்களிலும் அசடு சமர்த்து இருக்கிறதென்ற உண்மையை என்னுடைய பக்கத்து வீட்டு நாயைப் பார்த்தால் தெரிந்து கொள்ளுவீர்கள்.

சிலரைப் பார்த்தால் 'இவர்கள் அசடு போல இருக்கிறதே' என்ற எண்ணம் நம் மனத்தில் தோன்றுகிறது. அது போலவே, பக்கத்து வீட்டு நாயைப் பார்த்த அன்றே 'இது சிறிது அசடுபோல் இருக்கிறதே...! என்ற எண்ணமும் என் மனத்தில் விழுந்தது.

இப்படித் தோன்றிய எண்ணம் ஊர்ஜிதப் பட்டதற்குக் காரணம், உடனே அது என்னைப் பார்த்து வாலை ஆட்டியதுதான்.

என் சிறு வயதிலிருந்தே நாய்களுக்கு— அது சிறிதாக இருந்தாலும் பெரிதாக இருந்தாலும் என்னைக் கண்டால் அலர்ஜி!

அது ஏன் என்று எனக்கு இதுவரையில் தெரியாது!

நான் எந்த வீட்டுக்குப் போனாலும் அங்குள்ள நாய்கள் என்னைப் பார்த்துப் பெருங் குரலெடுத்துக் குரைக்க ஆரம்பித்துவிடும். வீதியில் நடந்தால் கேட்கவே வேண்டாம். சாதுவாகத் தூங்கிக் கொண்டிருக்கும் நாய் கூடத் தூக்கத்திலிருந்து திடுக்கிட்டு விழித்து எழுந்து, சிறிது தூரம் பின்னாலேயே வந்து, திருப்தியாகக் குரைத்த பிறகுதான் திரும்பவும் தன் யதாஸ்தானத்தை — குப்பைத் தொட்டியை அணுகி, குறைத் தூக்கத்தைத் தொடரும்.

சிறு வயதில் நான் ரகளை செய்யும்போதெல்லாம் என் பாட்டி அடிக்கடி 'மூஞ்சியைப் பாரு... மூஞ்சியை! நரிக் குறவன் மாதிரி!' என்று திட்டுவாள்.

நான் நரிக்குறவனாகப் பிறக்காவிட்டாலும் பாட்டி அடிக்கடி பெருங் குரலில் கத்தியது வீதியில் போன ஏதோ நாய்க்குக் கேட்டு, அது இப்படி ஊரில் உள்ள எல்லா நாய்களுக்கும் துர்ப்பிரசாரம் செய்திருக்க வேண்டும்' என்று சில சமயம் நான் எண்ணிக் கொள்ளுவேன்.

நான் பரம சாதுவாக உட்கார்ந்திருந்தாலும், என்னைப் பார்த்துப் பாய்ந்து வந்து குரைக்கும் நாய்களைப் பார்த்து விட்டு, வீட்டிலுள்ள அனைவரும், நான்தான் ஏதோ அதைச் சீண்டிக் குரைக்க வைப்பதாக எண்ணுவார்களே தவிர உண்மையாகவே நான் குற்றமற்றவன் என்று நம்ப மாட்டார்கள்.

இதனால் நாயை எங்கே கண்டாலும் சுபாவத்திலேயே சாதுவான நான், இன்னும் பரம சாதுவாக நடிக்க ஆரம்பித்தேன்.

நெஞ்சில் குற்ற உணர்வுடனும், முகத்தில் அசட்டுச் சிரிப்புடனும் நாய்களைச் சிநேக பாவத்துடன் பார்க்க ஆரம்பித்தேன். இதனால் நாளுக்கு நாள் என் மனத்தில் குற்ற உணர்ச்சிதான் அதிகரித்து வந்ததே தவிர, எந்த நாயும் என்னுடன் சிநேக பாவத்துடன் நடந்து கொண்டு குரைப்பதைக் குறைத்துக் கொள்ளவில்லை.

''உன்னைப் பார்த்து மட்டும் ஏன் குரைக்கிறது...?'' என்ற கேள்வியைப் பலர் வாயிலிருந்து பல விதமாகக் கேட்டுக் கேட்டு நானும் அலுத்துச் சலித்து விட்டேன்.

நாளடைவில் இந்தக் கேள்வி எனக்குப் பழக்கமாகி விட்டது.

''என் நண்பன் ஒருவன் தன் வீட்டில் புதிதாக வாங்கிய நாய்க்குட்டி ஏனோ குரைக்கவே மாட்டேன் என்கிறது என்று கவலைப்பட்டு, பிறகு அதை என் முன் கொண்டு வந்து விட்டுக் குரைக்கப் பண்ணி, திருப்தியுடன் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போனபோது கூட நான் சிறிதும் கவலைப்படவில்லை.

ஆனால், இதன் மூலம் என்னுடைய மானம் போகும்படியாக நேர்ந்







கது. நான் என் கல்யாணத்துக்குப் பெண் பார்க்கப் போனபோதுதான்!

பெண் பார்க்கும் படலம் முடிந்தது.

டிபன் படலம் ஆரம்பமாயிற்று.

நான் காப்பியைப் பருக ஆசையுடன் என் முன் வைக்கப்பட்டிருந்த வெள்ளி டம்ளரை எடுத்தேன்.

எங்கிருந்தோ பாய்ந்து வந்த நாயொன்று அங்கு அமர்ந்திருந்த பத்துப் பேரையும் விட்டு விட்டு, என் கையை அப்படியே கவ்விக் கொண்டது.

எல்லா நாய்களையும் போல் அது குரைப்பதுடன் நிறுத்திக் கொண்டிருந்தால் நான் அதைப் பொருட்படுத்தியிருக்க மாட்டேன்.

சனியன் கையைக் கவ்விய பதற்றத்தில் நான் காப்பியை சலவை வேஷ்டி — சட்டையில் கொட்டிக் கொண்டு, அபிஷேக அலங் கோலத்துடன் பெண் வீட்டார் முன் 'திரு திரு'வென்று திருடன் போல் விழித்தேன்.

''ஏய், ஜிம்பி! விடு அவரை... விடு விடு!'' என்று பல குரல்கள் ஏககாலத்தில் அலற, அந்த ஜிம்பி மட்டும் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலே நின்றது - அதாவது என் கையைக் கௌவிக் கொண்டு நின்றது.

அந்தச் சமயத்தில் இடிபோல் ஒரு குரலோசை கேட்டு, நான் வெலவெலத்துப் போனது போலவே, ஜிம்பியும் வெலவெலத்து என் கையை விட்டுவிடவே, நான் நிமிர்ந்து பார்த்தேன்.

என் எதிரே நான் பார்த்த பெண் நின்று கொண்டிருந்தாள்.



நான் அவளைத் தீனமாகப் பார்க்க, அவள் என்மேல் ஒரு நாணப் பார்வையை வீசி விட்டு உள்ளே ஓடி விட்டாள்.

உள்ளிருந்து அதே குரல் ரகசியமாகப் பேசுவதாக எண்ணிக் கொண்டு, ''எனக்கு அவரை மிகவும் பிடித்திருக்கிறதம்மா... மிகவும் பயந்த சுபாவம்!'' என்று கூறவே, நான் மறுபடியும் வெலவெலத்துப் போனேன்.

பெண்ணைப் பெற்றவர், முகம் மலர, என் சம்மதத்தைக் கேட்டபோது, நான் அதிர்ச்சியிலிருந்து விடுபடாத காரணத்தால் மௌனமாக இருக்க, மௌனம் சம்மதத்துக்கு அறிகுறி என்று தீர்மானித்து, ஆயுள் உள்ளளவும் நான் அந்தக் குரலைக் கண்டு நடுங்கும்படி அந்தப் பெண்ணைப் பெற்றவர் செய்து விட்டார்.

அன்றிலிருந்து என் மாமனார் வீட்டில், ''ஜிம்பிக்குப் பிடிப்பதில்லை'' என்ற சாக்கில் எனக்கு வெள்ளி டம்ளரில் காப்பி தருவதில்லை என்ற வயிற்றெரிச்சலை நான் யாரிடம் சொல்லி ஆற்றிக் கொள்ளுவது?

அண்டை அசல், பக்கத்து வீடு, எதிர் வீடு, இரண்டு வீடு தள்ளி, நான்கு வீடுகளுக்கு அப்பால், இப்படியாக அந்தத் தெருவில் யார் வீட்டிலும் நாய் இல்லை என்பதைத் தீர விசாரித்த பின்தான் நான் என் மனைவியுடன் இந்த வீட்டுக்குப் புதிதாகக் குடி புகுந்தேன்.

ஒரு மாதம் நிம்மதியாக ஓடிற்று.

ஒரு நாள் காலை எழுந்து வெளியில் வந்து பார்த்தபோது, பக்கத்து வீட்டு வேலியின் அருகில் வேப்ப மரத்து நிழலில் ஒரு நாய் சொகுசாகப் படுத்திருப்பது கண்ணில் படவே, திடுக்கிட்டு விட்டேன். உடனே, 'விசுக்'கென்று தலையை உள்ளே இழுத்துக் கொண்டேன்.

இரண்டு நிமிடங்கள் திருடனைப்போல் மறைந்து நின்று காத்துப் பார்த்தேன்.

என்ன ஆச்சரியம்! குரைப்புச் சத்தம் கேட்கவில்லை!

இதற்குள் — அது நாயாக இருந்தால் — எப்படியோ மோப்ப சக்தி மூலம் தன் வரவை உணர்ந்து ஆழ்ந்த தூக்கத்திலிருந்து கூடத் திடுக்கிட்டு எழுந்து குரைத்திருக்க வேண்டுமே!

இது நிஜ நாயா... அல்லது பொம்மையா? என்ற சந்தேகம் தோன்றவே மெதுவாக, என் உடலைக் கதவின் மறைவிலிருந்து வெளிப்படுத்தி முன்னேறினேன்.

நான் வேலியினருகில் நெருங்கி நின்றும், அந்த நாய் எழுந்திருக்காததைப் பார்த்து எனக்குப் பரம ஆச்சரியமாக இருந்தது.

கீழே கிடந்த வேப்பங்காய் ஒன்றைத் தயக்கத்துடன் எடுத்து, சுற்றும்முற்றும் ஒரு முறை நோட்டமிட்டு, நான் பாய்ந்து

ஸ்ரீ. பத்மாவதி

## பிரம்மச்சாரிகள் கிராமம்!



மேற்கு ஜெர்மன் கூட்டாட்சிக் குடியரசின் தென்திசையில் உள்ள ஒரு சிற்றூரில் பெண்வாடையே கிடையாது! காரணம் அங்குள்ள ஆண்கள் அனைவருமே கலியாணம் என்றதும் காத தூரம் ஓடும் கட்டைப் பிரம்மச்சாரிகள் தான்! இந்த ஆண்பிள்ளைகள் திருமண எண்ணமே இல்லாமல் காலங்கழித்துக் கொண்டிருப்பதால் இந்தச் சிற்றூரின் மக்கள் தொகை 297 ஆகக் குறைந்து விட்டதாம்! சிற்றூரின் மக்கள் தொகை ஒரேயடியாகக் குறைந்து விடக்கூடாதே என்ற கவலையுடன் பல பெண்கள் இந்தக் கட்டைப் பிரம்மச்சாரிகளைக் கல்யாணம் செய்துகொள்ள வலிய முன் வந்துள்ளனர்! நவீன ரிஷ்ய சிருங்கர்கள் வாழும் இந்த விசித்திர ஊரின் பெயர் 'இர்ஷ் பார்ன்பாஷ்' என்பதாகும். (யூ.பி.எஸ்.)

---

ஓடும் வழியில் யாரும் தடையாக இல்லை என்று நிச்சயப்படுத்திக் கொண்ட பின்னும் மெதுவாக நாயின் மேல் அதை விட்டெறிந்தேன்.

அது எங்கே விழுந்தது என்பதைக் கூடப் பார்க்காமல், நான் ஒரே ஓட்டமாக ஓடி, வீடு வராந்தாவில் புகுந்து படீரென்று கதவைச் சாத்திக் கொண்டேன்.

பெருமூச்சு வாங்க நின்றபோதுதான் நான் வீசிய வேப்பங் காய் நாய் மேல் படவே இல்லை என்பது எனக்குத் தெரிந்தது.

நான் சிறிது தைரியத்துடன் வெளியே வந்து, இந்தத் தடவை ஒரு சிறிய கல்லைப் பொறுக்கி எடுத்து, இரண்டு தடவை, நடுக்கம் நீங்கி, கைபழகி, குறி வருவதற்காக என் கால் மீதே வீசிக் கொண்ட பின், தைரியமாக நாய் மேல் விட்டெறிந்தேன்.

''ஆஹா! என் குறி தப்பவில்லை!''

அந்தக் கல் அந்த நாயின் தலைமேல் போய் 'லொட்'டென்று விழுந்தது. நாயும் விழித்துக் கொண்டு சடாலென்று எழுந்து நின்றதைப் பார்த்து, குறி தப்பாமல், கல் எறிந்த என் திறமையை எண்ணி நானே என்னைப் பாராட்டிக் கொண்டிருந்தபோதுதான் அலறி ஓட வேண்டிய நான் அசையாமல் நின்று மகிழ்ந்து கொண்டிருப்பது திடீரென்று ஞாபகம் வந்தது.

நான் என் சுய உணர்வடைந்து ஓட யத்தனித்தபோது எனக்கு ஒரு பெரிய அதிர்ச்சி ஏற்பட்டு, கால் சுவாதீனமற்று, நின்ற இடத்திலிருந்து நகர மறுத்தது.

கண் விழித்து, கல்லெறிந்த என்னை நன்றாக உற்றுப் பார்த்த அந்த நாய் பரபரப்புடன் என்னைப் பார்த்துத் தன் வாலை ஆட்டினால் எனக்கு அதிர்ச்சி ஏற்படாமல் என்ன செய்யும்?

வாலை ஆட்டியதுடன் நில்லாமல், அது எங்கள் வீட்டுத் தோட்டத்தினுள் வந்து என் காலை நக்கவும் ஆரம்பிக்கவே, நான் பிரமிப்புடன் கருங்கல் சிலை மாதிரி அப்படியே நின்று விட்டேன்!

என் வாழ்நாளில் புது அனுபவம்! ஒரு நாய் என்னைப் பார்த்துக் குரைக்காமல் வாலை ஆட்டுகிறது! பிறகு நக்கியும் கொடுக்கிறது!

திடீரென்று என் உடம்பு சிலிர்த்தது. நாய் என்னைப் பார்த்துக் குரைக்காததே எனக்கு இப்போது பெரிய அவமானமாகத் தோன்றியது. அந்த ஆத்திரத்தில் ஒரு பெரிய கல்லாகப் பொறுக்கிச் சிறிதும் யோசியாமல் அதன் மேல் விட்டெறிந்தேன்.

அது ரோஷமுள்ள நாயாக இருந்திருந்தால் இப்பொழுதாவது குரைத்து என் குறையைத் தீர்த்திருக்குமல்லவா?

ஆனால் அந்த அசட்டு நாய், நான் அதனுடன் விளையாடுவதாக எண்ணிக் கொண்டதோ என்னமோ!

தன் முதுகின் மீது பட்டுக் கீழே விழுந்த கல்லைப் பரம அக்கறையாகப் பொறுக்கி வாயில் கவ்விக் கொண்டு ஓடிவந்து என் கால் முன் சமர்ப்பித்தது.

இதற்கு மேல் என்ன வேண்டும்! ''அடுத்த வீட்டுக்குப் புதிதாக வந்துள்ள அந்த நாய் அசடேதான்!'' என்று தீர்மானித்து விட்டேன்.

இருந்தாலும், 'உங்களைப் பார்த்த முதல் பார்வையிலேயே நீங்கள் பரம அசடென்று எனக்குத் தெரிந்து விட்டது' என்று ஒரு நாளைக்கு ஆயிரம் தடவை தன் இடித்துரையில் இரக்கமின்றிக் குத்துரைக்கும் என் மனைவியைப் போல, நானும் நன்கு ஆராயாமல் அந்த நாயைப் பற்றி ஒரு முடிவுக்கு வர விரும்பவில்லை.

சில குழந்தைகள், எப்பொழுதும் பக்கத்து வீட்டு மாமா, மாமியுடன் கொஞ்சிக் கொண்டு, அங்கேயே சாப்பிட்டுத் தூங்கிக் கொண்டு, வேண்டாத உறவு கொண்டாடிக் கழுத்தறுக்குமே, அது போல் இந்த அசட்டு நாய் என்னவோ, பக்கத்து வீட்டு நாய்தானென்றாலும், எப்பொழுதும் எங்கள் வீட்டிலேயே பழியாகக் கிடந்து, என் காலைச் சுற்ற ஆரம்பித்தது.

இவ்வளவு நாட்கள், பல நூறு நாய்கள் என்னைப் பார்த்துக் குரைத்ததற்குப் பிராயச்



# இல்லம் நோக்கி

நாள் முழுவதும் கடுமையான உழைப்பு. இன்ப இல்லம்—உங்களது சொந்த இல்லம்—நோக்கிச் செல்ல வேண்டும் என்ற அவா உங்களுக்கு இல்லையா?

பிறகு ஏன் தயக்கம்? இன்றே கட்ட ஆரம்பியுங்கள் உங்களது இல்லத்தை. நாங்கள் வேண்டிய அளவு தருகிறோம்

# சங்கர் பிராண்ட் சிமெண்ட்




தேவைக்கு உங்கள் அருகாமையிலுள்ள எமது ஸ்டாக்கிஸ்டுகளை அணுகவும். அல்லது எமக்கு எழுதவும்.

## இந்தியா சிமெண்ட்ஸ் லிட்.

ரிஜிஸ்டர்ட் அலுவலகம்:
'தன் பில்டிங்', 175/1 மவுண்ட் ரோடு, சென்னை-2

தொழிற்சாலைகள்:
சங்கர்நகர், திருநெல்வேலி மாவட்டம்.
சங்கரி மேற்கு, சேலம் மாவட்டம்

Criterion-ITC-1546T

சகஜமாகச் சொப்பனத்திற்கூட என்னைப் பார்த்தால் வாலை ஆட்ட ஆரம்பித்தது. (தூங்கும்போது கூட அது அடிக்கடி தன் வாலை ஆட்டுவதற்கு வேறு காரணம் இருப்பதாக எனக்குத் தோன்ற வில்லை!)

நான் அதைப் பலவிதமாகச் சீண்டிப்பார்த்தேன். உர்...உர்... என்று உறுமியும் பார்த்தேன். ஒருவேளை மறந்திருக்குமோ என்று பல தடவை குரைத்துக் காட்டினேன். ஊஹூம்! அடுத்த வீட்டு நாய் இது மூன்றுக்கும் மசியாமல், நான் குரைக்கக் குரைக்க, வாலை இன்னும் படு வேகமாக ஆட்டி, என்னை அயர வைத்தது!

''பொறுத்திருந்து பார்ப்போம்'' என்று காத்திருந்தேன். முதல் நாள் மட்டுமல்ல. பிறகு என்றுமே அந்த நாய் என்னைப் பார்த்துக் குரைக்கவில்லை.

ஒரு நாள் ரகசியமாக என் மனைவி எனக்கு ஆபீசுக்குக் கட்டிக் கொடுத்த டிபனை அதற்குப் போட்டுப் பார்த்தேன்.

சாதாரணமாக, ஆபீசில் குப்பைத் தொட்டியில் நான் என் மனைவி கொடுக்கும் டிபனைக் கொட்டியதும், அதுவரை அங்கு மற்றவர் எறிந்த மீதியைத் தின்று கொண்டிருக்கும் நாய் அதை முகர்ந்து பார்த்துவிட்டு, பெரும் குரலெடுத்து என்னைப் பார்த்துக் குரைத்துத் தள்ளிவிட்டு, பிறகு குப்பைத் தொட்டியை நெருங்காமல் ஓடிவிடுவது வழக்கம்.

## உண்மைக் காதலர்கள்



மந்திரி கருணாநிதி வீட்டுத் திருமண விழாவில் ராஜாஜியும் பெரியாரும், அருகருகே அமர்ந்து மகிழ்ச்சியுடன் உரையாடுவதைக் கண்ட புகைப்படக்காரர்கள் அவர்களைப் படம் எடுக்கப் படையெடுத்தனர். இதைக் கவனித்த ராஜாஜி பெரியாரைப் பார்த்து, ''என்ன நமக்குத்தான் திருமணம் நடைபெறுகிறது போல் இருக்கிறதே'' என்று நகைச்சுவையுடன் கூறினார். பெரியார் குலுங்கக் குலுங்கச் சிரித்தார்.

உடனே நகைச்சுவை மிகுந்த அண்ணா சும்மா இருப்பாரா? ''உண்மையான இலக்கியக் காதலர்கள் ராஜாஜியும் பெரியாரும் தான்! அப்படி உள்ளம் நிறைந்து நன்றாகப் பழகுகிறார்கள். இந்த இரண்டு காதலர்களும் வந்து வாழ்த்துவதை மணமக்கள் தங்கள் வாழ்க்கையின் பேறாகக் கருத வேண்டும்'' என்று போட்டாரே ஒரு போடு! கூட்டத்தில் குபீரென்று சிரிப்பு எழுந்தது.

(தகவல்: நாகை வே. ஜெயராமன்)

இந்த அசட்டு நாயோ பரம ப்ரீதியுடன் நான் என் மனைவி முன் டிபனைத் தின்பது போலவே, என் முன் அந்த டிபனைச் சாப்பிட்டதைப் பார்க்க எனக்கே மிகவும் பரிதாபமாக இருந்தது! பாவம். பரம அசடு தான் என்று எண்ணிக் கொண்டேன்.

மற்றொரு நாள் ஒரு நண்பன், என் வீடு தேடி வந்து, தான் கொடுத்த இருபது ரூபாயைத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தான். நான் என்னிடம் ஒரு பைசாகூட இல்லை என்று மறுத்துக் கொண்டிருந்தேன்.

நாங்கள் பேசுவதை அருகிலிருந்து கேட்டுக் கொண்டிருந்த பக்கத்து வீட்டு நாய், விருட்டென்று மேஜையின் மேல் தாவி ஏறி, நான்கைந்து புத்தகங்களை உருட்டித் தள்ளி அடியில் மறைத்து வைத்திருந்த என் பர்ஸை எடுத்து என் மடியில் போடவே, அதிலிருந்து வெளி வந்த கற்றை நோட்டுகள் என்னைப் பார்த்துச் சிரிக்க, நான் நண்பனைப் பார்த்து அசட்டுச் சிரிப்பை உதிர்க்க, அவன் என்னை முறைத்துப் பார்த்து விட்டு இரண்டு பத்து ரூபாய் நோட்டுக்களை உருவிக் கொண்டு திரும்பிப் பார்க்காமல் வெளியே நடந்தான்.

''பேசியதை அப்படியே புரிந்துகொள்ளும் புத்திசாலி நாய்'' என்று பாராட்டவா நேரமும்?

நண்பனிடம் கடன் வாங்கிய பணத்தை இரண்டே நாட்களில் சுலபமாகத் திருப்பிக் கொடுக்கும்படியாகி விட்டதே என்ற ஆத்திரத்தில் ''சீ! அசட்டு ஜென்மமே!'' என்று பலமாகக் கத்தினேன்.

''ஏன், என்ன ஆயிற்று? ஏன் இப்படி உங்களையே திட்டிக் கொள்ளுகிறீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டே வெளியே வந்த என் மனைவி, ''ஆ!'' என்ற ஆச்சரியக் குரலுடன் நான் இதுவரையில் அவள் கண்களில் படாமல் சேமித்து வைத்திருந்த பணத்தை அப்படியே அள்ளிக் கொண்டு உள்ளே போய் விட்டாள்.

நான் ஒரு பெரிய உறுமலுடன் அடுத்த வீட்டு நாயைக் கோபத்துடன் உற்றுப் பார்த்துப் பற்களை நறநறவென்று கடித்தேன்.

''சீ...தூ..! அசட்டு நாயே!'' என்று கூவிக் கொண்டே காலி பர்ஸைப் படுவேகமாக அதன் மேல் விட்டெறிந்தேன்.

அது பரம ப்ரீதியுடன் வாலை ஆட்டிக் கொண்டே தன் மேல் வீசியெறியப்பட்ட பர்ஸைக் கவ்வி எடுத்துக் கொண்டு வந்து என் காலடியில் சேர்த்துவிட்டு, குரைக்காமல் — சிறிதுகூடக் குரைக்காமல் — என்னை வாஞ்சையுடன் நிமிர்ந்து பார்த்தது.

இப்பொழுது ஒப்புக் கொள்ளுகிறீர்களா, அடுத்த வீட்டு நாய் அசடுதான் என்பதை!

தாகத்திற்கோர்
தெவிட்டாத பானம்

# ஜூலா-கோலா

வின்ஸெண்டின்
நவீன பானம்

ஜில்லிட்டு அருந்துங்கள்




VC-104*A

# மூல நோயை

முற்றவிடாமல
நம்பிக்கையான

## ஹெடன்ஸா

உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
— ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

DOL-327/1 TAM

# கால் அரிப்பு சரும அரிப்பு

அரிப்பு, எரிச்சல் முதலிய உபாதைகளை உங்களால் தாங்க முடியாமல் பைத்தியம் பிடித்து விடும் போலிருக்கிறதா? உங்கள் சருமத்தில் வெடிப்புகள் தோன்றி தோல் உரிந்து ரத்தம் கசிகிறதா? பாதங்களிலும் கால் விரல்களுக்கிடையிலும் புண்கள் தோன்றி உபத்திரவம் செய்கின்றனவா? இவைகள் வெடித்துக் கசிந்து மேலும் புண்களை உண்டாக்குகின்றனவா? இவைகளுக்கெல்லாம் மூலகாரணம் சிங்கப்பூர் சொறி, வண்ணாரப்படை, என்று பல பெயர்களில் வழங்கப்படும் ஒருவகைக் கிருமி. மூலகாரணமான இந்தக் கிருமிகளை ஒழிக்கும்வரை இவ்வுபாதைகளிலிருந்து நிவாரணமடைய முடியாது. விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட நிக்ஸோடேர்ம் (Nixoderm) முதல் தடவை போட்டவுடனேயே அரிப்பை நிறுத்தி கிருமிகளைக் கொன்று சருமத்தின் புண்களை ஆற்றி மிருதுவாக்கி சுத்தப்படுத்த ஆரம்பிக்கிறது. நிக்ஸோடேர்ம் (Nixoderm) அரிப்பை நிறுத்துவதில் வெற்றி கண்டுள்ளது. மேலும் பாதத்தின் மேலிருக்கும் புண்கள் மேலாகப் பரவும் படை, முகப்பருக்கள் கட்டிகள் முகத்திலோ அல்லது தேகத்திலோ பரவிய படர் தாமரை முதலிய உபாதைகளைக் குணமாக்குகிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடேர்ம் (Nixoderm) வாங்குங்கள். பூரண திருப்தியை அது நிச்சயமாக அளிக்கும்.

# வீசி எறியப்பட்ட விமரிசனம்

ஸாரஸன்

“...மதுபான விடுதித் திறப்பு விழா மிக்க கோலாகலத்துடன் நடந்தேறியது.”

மேற்படி குறிப்பைக் கண்ணுற்ற அந்த இளம் பத்திரிகை நிருபர் ஏமாற்றமும் ஆத்திரமும் அடைந்தவராக, அப்பத்திரிகைத் தாளைத் தூக்கிக் கொண்டு ஓடினார் பத்திரிகையின் அலுவலகத்துக்கு, முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடிக்க!

முதல் நாள் அந்த இளம் நிருபருக்குப் பத்திரிகையாசிரியர் இட்டிருந்த கட்டளை, அந்தப் பிராந்தியத்திலே அன்று புதிதாகத் திறக்கப்படவிருந்த மதுபான விடுதியின் திறப்பு விழாவுக்குச் சென்று, அதைப் பற்றி விமரிசனம் எழுத வேண்டும் என்று. அந்தப் பிரகாரம் நிருபர் அம்மதுபான விடுதியின் திறப்பு விழாவுக்குச் சென்றார்.

இயற்கையிலேயே நகைச்சுவையுடன் பேசவும் எழுதவும் திறமை படைத்திருந்த அந்த நிருபர், அதன் திறப்பு விழாவின் விமரிசனத்தை அதன் தனித் தன்மைக்குகந்த வகையிலே நகைச்சுவையுடன் தம் கற்பனை சக்தியையும் சேர்த்து எழுதி முடித்தார். தெளிவாகக் குறிப்பிட வேண்டுமானால் ஒரு குடிகாரன் எப்படிப் பேசுவானோ அந்த முறையில் இருந்தது விமரிசனம். அதைப் படித்துப் பார்த்த அந்த நிருபருக்கே கட்டுக்கடங்காத சிரிப்பு ஏற்பட்டது. அத்தனை பிரமாதமாய் அமைந்து விட்டது விமர்சனம். உடனே அதை அலுவலகத்துக்கு அனுப்பி விட்டுத் திருப்தியுடன் வீடு திரும்பினார்.

மறுநாட்காலை ஆவலுடன் பத்திரிகையைப் பிரித்தவர், தம் விமரிசனத்தைக் காணாமல் பெரிதும் ஏமாற்றமடைந்ததில் என்ன வியப்பு இருக்க முடியும்? பதிலாக எங்கோ ஒருமூலையிலே சிறு எழுத்துக்களிலே மேலே ஆரம்பத்திலே குறிப்பிட்டுள்ள செய்தி பிரசுரம் செய்யப்பட்டிருந்தது.

ஃ ஃ ஃ

தன் கையெழுத்துப் பிரதி என்ன ஆயிற்று என்றும், அதைப் பிரசுரம் செய்யாமல், இந்த உப்புச்சப்பில்லாத இரண்டு வரிச் செய்தியைப் பிரசுரம் செய்தது யாருடைய வேலை என்றும் கோபத்துடன் கேட்டார் நிருபர். தக்க பதில் யாரிடமிருந்தும் கிடைக்காமல் போகவே, தலையைச் சொறிந்தவண்ணம் இங்குமங்கும் உலவினார். அப்போது வயது முதிர்ந்த புரூஃப் ரீடர் ஒருவர், நிருபரிடம் ஓடி வந்து அவருடைய கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஒரு மூலைக்குச் சென்றார்.

“தம்பி! ஏன் தக்காபுக்கா என்று குதிக்கிறாய்? எனக்கு ஒரு சுருட்டு தருகிறாயா?” என்று கேட்டார் அவர்.

ஒன்றும் புரியாத நிருபர், “சுருட்டா? ஏன்?” என்று கேட்க, புரூஃப்ரீடர், “உன் வேலையைக் காப்பாற்றித் தந்ததற்காக!” என்று கூறினார்.

“என்ன ஐயா, உளறுகிறீர்கள்?”

“உளறவில்லை, தம்பி, உளறவில்லை! விஷயத்தைக் கேள். இந்தப் பத்திரிகையின் ஆசிரியரைப் பற்றி உனக்கு ஒரு இழவும் தெரியாது போலிருக்கிறது! மனிதர் நெருப்பு. ஆம், இதுவரை எனக்குத் தெரிந்து மூன்று பேருடைய சீட்டு கிழிந்திருக்கிறது...”

“ஏன்?”

“ஏனா? அதற்காகத்தான்!”

“எதற்காகத்தான்?” என்று திகைத்துப் போய்க் கேட்டார் நிருபர்.

“குடிப் பழக்கத்தின் காரணமாய்த்தான். நீ நேற்று எழுதி அனுப்பிய விழாவைப் பற்றிய விமரிசனம், நம் பத்திராதிபரின் கண்களில் பட்டிருக்குமேயானால் உனக்கும் சீட்டுக் கிழிந்திருக்கும். பாவம்! நீ நல்ல திறமையுள்ள இளைஞனாக இருக்கிறாய். ஏதோ சபலத்தினால் கொஞ்சம் அதிகமாகப் போட்டு விட்டாய் போலிருக்கிறது அன்று. அதனால்தான் உன் எழுத்திலும் அந்த வாடை நிறைய இருந்தது. நல்ல வேளை! உன் விமர்சனம் என் கண்ணில் பட்டதோ! நீ பிழைத்தாயோ! அதை ‘அப்படியே தூக்கி வீசி எறிந்துவிட்டு, சுருக்கமாய் இரண்டே வரிகளில் ஒரு செய்தியை மட்டும் எழுதி, உன் மானம், வேலை இரண்டையும் காப்பாற்றினேன். அப்படியிருக்க நீ என்னடாவென்றால் எண்ணெயில் விழுந்த எள்ளுருண்டையாய்க் குதிக்கிறாய்! உம்! எடு ஒரு நல்ல சுருட்டு!” என்று கூறி நகைத்தார் புரூஃப் ரீடர்.

யார் அந்தப் பத்திரிகை நிருபர் தெரியுமா? உலகம் போற்றும் நகைச்சுவை மன்னர் மார்க் ட்வைன்!






# வஸந்தத்தின் பொலிவு ...







## பினகா

பரிமள பவுடர்
துர்கந்த மகற்றி
சருமத்தை மென்மையாக்கும்
திரவகங்கள் அடங்கியது.

# அமெரிக்காவிலிருந்து அண்ணா அனுப்பினார்!

"கொக்கி"

சென்னை முதன் மந்திரி திரு அண்ணாதுரையும் அமெரிக்க ஜனாதிபதி ஜான்ஸனும் 'காம்ப் டேவிட்' மாளிகைத் தோட்டத்தில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

கூட இருந்த அண்ணாவின் காரியதரிசி திரு சொக்கலிங்கம் தமிழ் நாட்டிலிருந்து கொண்டு சென்றிருந்த இளநீரை வெட்டிக் கிளாஸ் டம்ளர்களில் ஊற்றி இருவருக்கும் கொடுத்துக் கொண்டிருந்தார்.



"தமிழ்நாட்டில் இவ்வளவு இனிய இளநீர் இருக்கும்போது, போர்க்களத்துச் சூடு தணியச் சமாதானப் பேச்சுவார்த்தைகளை அங்கே வைத்துக் கொள்ளலாம். இந்தியாவில் டெல்லியைத் தவிர வேறு தகுந்த இடம் இல்லை என்று யாரும் தவறாக நினைத்துவிடக் கூடாது!" என்றார் அண்ணாதுரை.

காரியதரிசி சொக்கலிங்கம், "இப்போதுகூட ஒன்றும் குடிமுழுகிவிடவில்லை. உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பு வெளியீடு இரண்டு பிரதிகள் அதிகமாகவே கொண்டு வந்திருக்கிறேன். வியட்நாம் போர்த் தலைவர்கள் இரு சாராருக்கும் அனுப்பி வைத்துத் தமிழ் நாட்டிற்கு வந்து பார்க்குமாறு தெரிவித்துவிடலாம்" என்றார்.

"இதுவும் நல்ல யோசனைதான்!" என்று கூறிவிட்டு, ஜான்ஸன் தமக்கு அருகிலிருந்த ஒரு பணியாளை அழைத்து அவனிடம் ஏதோ கூறவே, அவன் வெளியே சென்று, இரண்டு பேர்களை அழைத்துக் கொண்டு வந்தான்.

வியட்நாம் யுத்த நிறுத்தக் கமிஷனைச் சேர்ந்தவர்களாம் அந்த இருவரும்! திரு அண்ணா அளித்த தமிழ் வெளியீடு ஒன்றை வாங்கிக் கொண்டு அடுத்த நிமிடமே அவர்கள் கிளம்பி, சென்னை சிந்தாதிரிப்பேட்டை அருகே வந்து சேர்ந்தார்கள்.

பக்கத்துப் பூங்காவில் ஒரு 'மீட்டிங்' நடந்து கொண்டிருந்தது. கூட்டத்திற்கு வந்திருந்தவர்கள் மிகக் குறைவு. ஆனால் ஒலிபெருக்கி போட்ட இரைச்சல் அதிகமாயிருந்தது.

"இந்த இடம் நம் வியட்நாம் பேச்சு வார்த்தைகளுக்குச் சரிப்பட்டு வராது!" என்று சொல்லிவிட்டு, மெரினா கடற்கரையை அடைந்த அவர்களைத் துரத்திக்கொண்டு பட்டாணி சுண்டல்காரர்கள் இருவர் பின்தொடர்ந்து வந்தார்கள்.

"இந்த இடமும் தேவையில்லை!" என்று கூறிவிட்டு, போட்மெயிலில் ஏறி இரவே கொள்ளிடக் கரைக்கு வந்து சேர்ந்தார்கள் அவ்விருவரும்.



கோடை காலமல்லவா? கொள்ளிடத்துக் கொழுந்து வெண்மணலில் துண்டை விரித்துப் போட்டுக் கொண்டு சிலர் உறங்கிக் கொண்டிருந்தனர்.

இவ்விருவரும் அவர்களை எழுப்பிக் கேட்டபோது, "இந்த இடத்தில் எப்பேர்ப்பட்ட பேச்சாளருக்கும், கொள்ளிடக் காற்று உறக்கத்தை உண்டாக்கி விடும்!" என்று கூறவே, அதை நினைத்து அவ்விரு





வரும் மறு நாள் மாலை மீண்டும் சென்னைக்கு வந்து, மயிலை கபாலீசுவரர் கோயில் குளத்தின் அழகிய படிகளில் வந்து அமர்ந்து கொண்டனர்.

ஐந்தாறு சிறுவர்கள் தண்ணீரில் குதித்து விளையாடியதோடு, கரையிலும் தண்ணீரை அள்ளித் தெளித்தார்கள்.

''சரி சரி, இந்தக் குளக்கரையும் பயனில்லை'' என்று சொல்லிக் கொண்டு, அவ்விருவரும் தி. நகருக்கு வழி கேட்டுக் கொண்டு கிளம்பினார்கள்.

வழியில் ஓரிடத்தில் கானசபா ஒன்றில் பாட்டுக் கச்சேரி நடந்து கொண்டிருந்தது. சபை நெருக்கமாக இல்லை. மேடையில் கச்சேரி நடப்பதை மறந்து அங்கங்கே சிலர் சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களிடையே அமர்ந்து கொண்ட 'வியட் நாம்' காரர்கள் இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

''சமாதானம் பேச இது சரியான இடம். பேசுவதற்கு ஏற்ற இடம். அமைதியானால் பாடவும்கூடப் பாடலாம் போல் இருக்கிறது! பாட்டுக்கு எவ்வித ஆட்சேபமும் இல்லை என்று தெரிகிறது. இந்த இடத்திலேயே நமது வியட்நாம் சமாதானப் பேச்சு வார்த்தை களை வைத்துக் கொள்ளலாம் என்று இரு ஜான்ஸனிடமும், அங்கு வந்திருக்கும் இரு அண்ணனிடமும் தெரிவித்து விடுவோம்!'' என்று கூறி விட்டு அந்த இருவரும் எழுந்த போது, பாடகர் அவர்களை விட்டுவிடவில்லை —

''ஏன்? எழுந்துவிட்டீர்கள்? உங்களுடைய பேச்சுக்குத் தொந்தரவாக நான் சற்று உரக்கப் பாடி விட்டேனோ?'' என்று கேட்டு வைத்தார்.

வாழ்க்கைச் சித்திரம்-3

# ஏழை பங்காளன்!

தமிழழகன்

'ஏழைபங் காளன்!' என்றே ஒருவனைச்
சூழ இருந்தோர் சொன்னார்: அதனால்,
நன்றே எனவும் நாடினேன், அவனை;
அன்றே உரைத்தான், அவனிது போலே!:

''ஏழையின் பாலும் எனக்கொரு பங்கை
வாழுமா றெண்ணி வாங்கிக் கொள்வதாம்,
காணுமிப் பேரை நயமுறப் பெற்றேன்:
தானுமாய் நீயும் தருக, உன் பங்கே!''

இப்பொழுது நடைபெறுகிறது

புரட்சி நடிகர் எம்.ஜி.ஆர். அளிக்கும்

# கண்ணன் என் காதலன்

சத்யா மூவீஸ்
தயாரிப்பு





சென்னை
மற்றும்
தென்னகமெங்கும்

இசை
M.S.விஸ்வநாதன்
ஒளிப்பதிவு
V.ராமமூர்த்தி

ELEGANT

திரைக்கதை, தயாரிப்பு
**R.M.வீரப்பன்**

டைரக்ஷன்
**ப.நீலகண்டன்**

# போற்றி! போற்றி!



ஞானப் பெருங்கடலே,
ஞாயிறெனும் நல்லமுதே
மோனச் சுடர்வடிவே,
முத்திக்கு வித்தகமே,
ஈனத் தனமறுக்க
ஏய்ந்ததவச் செந்நெருப்பே,
வானத் தனியரசே,
வாழ்த்தியுனைப் போற்றுகிறோம்!

தத்துவத்தின் தத்துவமே,
தாயான மெய்த்தவமே,
சத்துவத்தின் சீர்பொருளே,
சங்கரனும் பேரருளே,
வித்தகத்திற் கப்பாலும்
விண்டறியா மேலறிவே,
எத்துவக்கும் ஆயினுமே
ஏற்றியுனைப் போற்றுகிறோம்!

மூலக் கனற்கவடே,
மும்மைக்கும் வாள்குவடே
காலக் கரையடங்காக்
காவியத்தேன் பேராறே,
சாலப் புதிர்விளக்கும்
சமயத்தின் கைவிளக்கே,
நீல மிடற்றனென்றே
நேர்ந்துன்னைப் போற்றுகிறோம்!

நாதாந்த நாயகமே,
நாயகனார் தாயகமே,
வேதாந்த வித்தகனே,
வித்தடங்கா உத்தமனே,
போதாந்த போதகனே,
போதுக்கும் சாதகனே,
வாதாந்தம் என்பதின்றி
வாழுநினைப் போற்றுகிறோம்!



காமாட்சி நாதன்

"என்னய்யா நியூஸ் கொடுக்கிறீங்க? சும்மா சும்மா வியட்னாம் போரைப் பற்றியும் மரீனாச் சிலைகளைப் பற்றியும்தானா நியூஸ்? போரடிச்சுப் போச்சு!" என்று அங்கலாய்க்கும் ஆத்மாக்கள் எத்தனையோ பேர்கள் நம்மிடையே இருக்கிறார்கள். அவர்களையே அண்டி 'எந்த மாதிரியான செய்திகள் அவர்கள் மனத்தைக் கிளுகிளுக்க வைக்கும்?' என்று கேட்டால் அவர்கள் இப்படிச் சில சாம்பிள்களை உதிர்க்கலாம்! ★



1

பெரியார் இராமசாமி தீவிரமாகத் தமிழ் படிக்க ஆரம்பித்திருக்கிறார். இதற்காக மூன்று பண்டிதர்களிடம் அவர் டியூஷன் வைத்துக் கொண்டிருக்கிறாராம். எப்படியாவது ஒரு பி. ஓ. எல். பட்டம் பெற்றுத் 'தமிழையா'வாக மாறிவிடக் கங்கணம் கட்டிக் கொண்டு அதற்கான ஏற்பாடுகளில் முனைந்திருக்கிறார்.



2

திரு தவஞானம், ஆக்ஸ்போர்டு கலாசாலையுடன் தொடர்பு வைத்துக் கொண்டு தபால் மூலம் ஆங்கிலம் கற்று வந்தது வாசகர்களுக்குத் தெரிந்ததே! இப்போது தபால் மூலமாகவே எழுதிப் பரீட்சையில் முதல் வகுப்பில் தேறி எம். ஏ. (ஆக்ஸ்போர்டு) பட்டத்தையும் பெற்று விட்டார். பட்டத்தை நேரடியாகப் போய் வாங்கிக் கொள்ளப் போகிறாரா, அல்லது அதையும் தபாலிலேயே பெறப்போகிறாரா என்று இன்னும் தெரியவில்லை.



3

பாரதப் பிரதமர் திருமதி சந்திரா காந்தி திடீரென்று பதவியை உதறிவிட்டுத் தம் இத்தாலிய மருமகளுக்கு ஏற்ற இந்திய மாமியாராக வீட்டில் உட்கார்ந்து விடத் தீர்மானித்ததை அவசரம் அவசரமாகக் கூடிய காங்கிரஸ் கமிட்டி தீவிரமாக ஆராய்ந்து கொண்டிருக்கிறது. ராஜிநாமா ஏற்றுக் கொள்ளப்பட்டால் அதை அடுத்து நடக்கக்கூடிய பதவிப் போரைச் சமாளிக்க ஏற்கனவே இந்தத் துறையில் அநுபவம் வாய்ந்த ராமராஜருக்கு அழைப்பு அனுப்பி யிருப்பதாக விஷயமறிந்த வட்டாரங்கள் கூறுகின்றன.

4

சென்னை நகரசபை உறுப்பினர்களின் நேற்றைய விசேஷக் கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது:

"மரீனாக்கடற்கரையில் துறைமுக எல்லையிலிருந்து எலியட்ஸ் கடற்கரைவரை யார் வேணுமானாலும் தங்கள் சிலையையோ அல்லது தங்களுக்கு வேண்டியவர்கள் சிலைகளையோ தாராளமாக வைக்கலாம். ஆனால் அப்படிச் சிலைகளை வைக்கும் இடத்துக்குக் கட்டணமாக சதுர அடிக்கு இரண்டாயிரம் ரூபாய் வீதம் செலுத்த வேண்டும். அவ்வப்போது நகரசபை சொத்துக்களுக்குச் சில்லறைத்திருட்டுகளினால் ஏற்படும் நஷ்டத்தை ஈடு கட்ட இந்தப் பணம் உபயோகிக்கப்படும்."

எந்த நகரசபை உறுப்பினர் தொகுதியைச் சேர்ந்தவர்கள் கடற்கரைப் பிரதேசத்தில் அதிகச் சிலைகள் வைக்கிறார்களோ, அந்தத் தொகுதி உறுப்பினர் சிலையைக் கார்ப்பொரேஷனே தன் செலவில் நிறுத்த முன்வரும் என்றும், மேயர் உற்சாகப்படுத்துகிறாராம்.

இந்த ஏற்பாடுகளை ஒட்டிச் சீக்கிரமே உதவிச் சிலைக் கமிஷனர் பதவி ஒன்று தோற்றுவிக்கப்படும் என்று நம்பகமான வட்டாரத்திலிருந்து அறிகிறோம்.

5

'தமிழ்த் திரைப்படங்களிலிருந்து பொறுக்கி யெடுக்கப்பட்ட சில ருசிகரமான சம்பாஷணைப் பகுதிகளைச் சென்னை நகரப் போக்குவரத்து பஸ்களில் எழுதப் போவதாக ஏதாவது யோசனை இருக்கிறதா?' என்ற கேள்விக்கு நிருபர்கள் கூட்டத்தில் போக்குவரத்து மந்திரி காருண்யபதி திட்டவட்டமாக மறுப்புத் தெரிவித்தார்.

6

பிரஞ்சு ஜனாதிபதி டிகோல் தம் மூக்கை வெகு திறமையாகப் புகைப்படம் பிடித்த ஒரு பிரிட்டிஷ் புகைப்படக்காரருக்கு ஐயாயிரம் பிராங்குகள் அன்பளிப்பாகக் கொடுத்திருக்கிறார். இப்போது டிகோல் எங்கு கிளம்பினாலும், புகைப் படக்காரர்கள் அவர் மூக்கைக் குறி வைத்துக் கூட்டம் கூட்டமாக வருகிறார்களாம்.

7

பிரபல திரைப்பட நட்சத்திரம் ஆர். கே. ரஜியா ஸ்விட்சர்லாந்துக்குப் போகும் மர்மம் இப்போதுதான் புலனாகிறது. ஒரு நாள் அவர் கனவில் முருகன் தோன்றி 'நான் பழனியில் இருப்பதால்தானே அடிக்கடி என்னை வந்து தரிசனம் செய்கிறாய். நான் ஸ்விட்சர்லாந்தில் இருந்தால் என்ன செய்வாய்?' என்று கேட்டாரும். 'நான் அங்கேயும் வந்து தரிசிப்பேன்' என்றாராம் அவர். அந்தப் பிரார்த்தனையை நிறைவேற்றத்தான் ஆல்ப்ஸ் மலையில் ஆரோகணித்திருக்கும் முருகனைக் காண அவர் அயல் நாட்டுப் பிரயாணத்தை மேற்கொள்கிறாராம்.

# சூடாக வேண்டுமா?
# சுவையாக வேண்டுமா?

8

தமிழ் எழுதாதோர் சங்கத் தலைவர், சங்கத்தின் காரியதரிசி தம்மையும் காரியக் கமிட்டியையும் கலந்தாலோசிக்காமல் யாரும் பேசாத சில பிரசங்கங்களுக்கு ஏற்பாடு செய்ததால், காரியதரிசி மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்தார். அதெப்படி என்னை நம்பாமல் இருக்கலாம் என்று காரியதரிசி, தலைவர் முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்டவர் அல்ல என்று நிரூபிக்க முயலுகிறார். அம்பலத்துக்கு வரப்போகும் அடுத்த கட்டத்தை வம்பர்கள் ஆவலோடு எதிர்பார்க்கிறார்கள்.

— பட்டினத்தார்

# ராஜாளி

பூவை எஸ். ஆறுமுகம்

"ஏலே, அஞ்சலைப் பெண்ணே!" வீட்டு வாசலில் நின்று அழைத்தான் பச்சை முத்து.

சித்திரை வெய்யில் பாதங்களைச் சுட்டு உச்சந் தலைக்கு ஏறியது. முயல்கள் உள்ளடங்கிய கோணியைப் பனை ஓலைத் தாழ்வாரத்தின் ஈசான்ய மூலையில் பதனமாக வைத்தான். "இரவு இந்த முசலாலேதானே எனக்கும் எம் பொஞ்சாதிக்கும் பேச்சு வார்த்தை தடிச்சுது?...இப்ப அவள் இந்த முசலுங்களைக் கண்டால் இன்னு சொல்லுவா!" என்று ஆனந்தத்தின் நினைப்பில் ஊசலாடியவனாக, கண்ணி வலை, பிடி கயிறு, சுழிவேல் கழி ஆகியவைகளையெல்லாம் ஓர் ஓரமாகப் போட்டான். நாக்கு வறண்டது. தலையில் முண்டாக சுற்றிக் கட்டியிருந்த சாய வேஷ்டியை அவிழ்த்து முகத்தைத் துடைத்துக் கொண்டான், பச்சை முத்து. கருக்கரிவாள் மீசை இப்படியா பயமுறுத்த வேண்டும்?

"அஞ்சலே!......" பச்சைமுத்து கூப்பாடு போட்டான்.

பதில் இல்லை.

வீடு பூட்டியது பூட்டியவாக்கில் காணப்பட்டது.

இனம் புரியாத தவிப்பு அவனைக் கதிகலங்க அடித்தது. எதையோ நினைந்தான். எதுவோ தோன்றியது. எண் சாண் உடம்பு குறைவசப்பட்ட ஆடுதொடாச் செடியாக அல்லாடத் தலைப்பட்டது.

"சின்னுவி, எம் பொஞ்சாதி இங்கிட்டு வந்திச்சா?"

"இல்லையே, தம்பி! நானுகூட இப்பத்தான் குளமங்கலத்துக்குப் போயிட்டு வந்து கஞ்சி குடிச்சேன். ஒங்க வீட்டுத் தடத்திலே வெள்ளனப் போறப்ப ஒரு குரல் குடுத்துப் பார்த்தேன். பேச்சு மூச்சைக் காணலே. சின்னஞ் சிறுக அசந்து தூங்கறதாங் காட்டியின்னு மேம் போக்கா எம்பாட்டிலே நடையைக் கட்டிப்புட்டேன். இந்த மஞ்சாங்குடியிருப்பு வீடு இருபது இருபத்தஞ்சுக்குள்ளாறத்தான் 'அது' இருக்கும். இரு, நான் ஒரு கூப்பாடு போட்டுப் பாக்கிறேனே!" என்று சொல்லி, கையைக் கலயத்துத் தண்ணீரில் கழுவி விட்டவளாக, வாசலுக்கு வந்து அலட்டிப் பார்த்தான்.

அண்டை அயலில் இருந்தவர்களும், "இங்கிட்டு வல்லையே!" என்று பதில் குரல் கொடுத்தார்கள்.

பச்சை முத்துவுக்கு ஈரல் குலைநடுக்கம் கண்டது. அவளுக்கு என்ன நேர்ந்திருக்குமோ என்று எண்ணிக் குழம்பினான். நேற்று இரவில் நடந்த சலசலப்பு வெள்ளோட்டம் காட்டியது. அவனுள் ஊமைத்தனமாக ஊடாடி இருந்த தவிப்பு இப்போது வேதனையாக உருக்கொண்டது.

"என்ன தம்பி, அதிசயக் கூத்தா இருக்கே?.... அஞ்சலையை நீ கண்ணாலம் கட்டி வந்த இந்த ஒரு வருசத்திலே அது இந்த ஊர்க் கோட்டையவுட்டுக் கால் உதறிப் போட்டு நான் கண்டதில்லையே?.... ஆமா, ஒங்களுக்குள்ளாற ஏதாவது தகராறு நடந்திச்சா?"

தென்னங்கீற்றுக்களின் சீதளக் காற்றையா அவன் அனுபவித்தான்? — ஊஹூம்!

"சும்மா ஒரு துளியூண்டு தகராறிலே எனக்குக் கோவம் வெடிச்சது. ஒரு தட்டுத் தட்டினேன். அம்புட்டுத்தான்!"

"ஆத்தாடி! புருசன் பொண்டாட்டின்னு அல்லாம்தான் இருக்கும். அதுக்காகவா அது ஊட்டைவுட்டுப்புட்டு அடியெடுத்து வச்சிருக்கும்? பொம்பளை கோவப்பட்டா வாயக்குப்படுமா?"

"ஒண்ணும் புரியலையே சின்னுவி. ஆறு, கோவம் அடங்கின கருக்கிலே எனக்கு அது கடுசோறு போட்டுச்சு. பிறகு வாசலிலே



குந்திக்கிட்டு வெத்திலைச் சருகு போட்டுக்கிணுதே!"

"எப்புத்தி கெடந்து முளிக்குதே தம்பி! ஒரு வேளை, அது அதோட ஆத்தா ஊட்டுக்குப் போயிருக்குமோ?"

"அப்பிடிப் போறதுக்கு வழி இல்லையே சின்னுவி ...? எங்க பிணக்குத் தீர்ந்திடலைன்னு அந்தப் பேச்சு சரிதான். நாங்கதான் ராசி ஆகிப்புட்டோமின்னு சொல்லிறேனே?" குரல் கம்மியது பச்சை முத்துவுக்கு.

மருள் கொண்டு அப்படியே நின்றான் பச்சை முத்து. காவடியில் சுற்றி விளையாடிக் கொண்டிருந்த அணில் ஒன்று நேற்று தன் குடிசைக்கு வந்திருந்த விருந்தாளியை நினைவூட்டியது. 'அஞ்சலைப் பெண்ணோட முறை மச்சான்காரன் சன்னாசி எம்மாம் தொலைவுக்கு எம் பேச்சைக் கேட்டு மதிச்சாரு? ஊம்!....'

பச்சைமுத்து என்னாத எண்ணமெல்லாம் எண்ணினான்.

வேலிக் கருப்படைச்சாலில் 'உருவு கருக்கு' போட்டு முடியப்பட்டிருந்த பிடி

கயிற்றில் ஒன்றோடொன்று பிணைக்கப்பட்டுச் செம்மறிகள் சில பின்னிக் கிடந்தன.

'இந்நேரம் அஞ்சலை இருந்தாக்க, தொரட்டிக் கம்பிலே நாலு தப்படி அரசங் கொழுந்து இறுங்கிப் போட்டிருக்காதா?.... ரெண்டு வாட்டி வடிச்ச தண்ணியிலே புளியங் கொட்டையை ஊறப்போட்டு அந்த வாயில்லாச் சீவன்களுக்கு வச்சிருக்காதா? அதோ நிக்குது மொட்டை வண்டி. அது நிழலுக்கு ஒதுங்கியிருக்காதா? ஆடிப் பட்டத்துக்குப் புதுச் சோடி வாங்கிக்கிடலாம்னு பழைய மாடுங்களை வித்துப் பணம் பண்ணச் சொல்லி யோசனை சொல்லிச்ச என்னோட அஞ்சலை. அது பேச்சுப் படிக்கு அறந்தாங்கிச் செவ்வாச் சந்தையிலே போயி நாலு பச்சைத் தாளுக்கு வித்துப்பிட்டு வந்தேன். குத்துக் கடலை வித்த பணம் ஆயிரத்துச் சொச்சமும் தாய் வீட்டிலே சொனையா இருக்கு. அதைக் கொண்டு ஒரு மா, ரெண்டு மா நிலம் வாங்கிப் போட்டா, வயித்துப் பாட்டுக்கு வஞ்சனையில்லாம நெல் வருமேயின்னு யோசனை சொன்னுளே அஞ்சலை....? அப்படிப்பட்டவ எங்கே போயிருப்பா.....?'

முயல்களின் துடிப்பு அடங்கிவிட்டிருந்ததைக் கண்டான்; எதையோ அவன் எண்ணத் தலைப்பட்டான். அதற்குள் அவன் காலடியில் ஓர் அணில் வந்து விளையாடியது; விளையாட்டுக் காட்டியது.

நேற்றைக்குக் கத்திரிக்காய்ப் பாத்திகளுக்கு ஒரு பாட்டம் தண்ணீர் சேந்தி ஊற்றிவிட்டு, கடுசோறு உண்ண ஆயத்தப் பட்டான், பச்சைமுத்து.

''எத்தினிதரம் மச்சானுக்குப் படிக்கப் படிக்கச் சொன்னேன். எனக்கு முசல் கறி வேணுமின்னு!.....'' என்று சோற்றை வட்டியில் ஆவி பறக்கக் கொட்டிக்கொண்டு கோபித்தாள் பெண்டாட்டி.

துணுக்குற்ற பச்சைமுத்து ஏதோ சமாதானம் சொல்ல வாயெடுத்தான்.

அதற்குள் விருந்தாளியாக வந்து நின்றான் சன்னாசி. வேம்பங்குடி ஆள். அஞ்சலைக்குச் சொந்த அத்தை மகன். முறைமைக்காரன். வாட்டசாட்டமாக இருந்தான். இடுப்பில் இருந்த ரொக்கப் பணம் அவன் முகத்தில் பேசியது. ரொக்கப்புள்ளி ஆயிற்றே!

''அயித்த மவனுங்காட்டி! வாங்க.... வாங்க....!'' என்று வரவேற்றாள் அம்மான் மகள்.

''வாங்கங்கிறேன்'' என்றான், பச்சைமுத்து. வந்த விருந்தாளியைக் கண்ட சடுதியில், கைக் கவளம் கை நழுவியது. கைகழுவினான். 'இந்த ஆம்பளை எதுக்கு இங்கிட்டாலே வந்தான்? காலிப் பயலாமே இவன்? அடபாவி!'

விருந்தாளி வாழை இலை சாப்பாடு சாப்பிட்டான். 'கச்சப் பொடி' வறுவல்; கறிவேப்பிலைத் துவையல் ஆக்கின குழம்பு! உண்டு முடித்ததும் கொல்லைப் பகுதித் தோட்டத்தில் வந்து குந்தினான் சன்னாசி. உடன் வந்தான் பச்சை. தாம்பூலம் தரித்துக் கொண்டார்கள். அஞ்சலையும் வந்தாள்.

அப்போது, ஒட்டு மரத்திலிருந்து ஒட்டு மாம்பழம் ஒன்று விழுந்தது. அணில் கடித்த பழம் அது. அதைத் தேடி வந்த அணில் ஒன்று, சுற்றிச் சூழ அக்கனியைப் பார்த்து விட்டு ஓடியது.

இக்காட்சியைக் கண்ட விருந்தினனான சன்னாசிக்கு ஒரே வியப்பாகப் போய்விட்டது. ''என்னுங்கறேன்! இந்த அணிலு ஒட்டுப் பழத்தை நாடலே?'' என்று வினவினான் சன்னாசி.

பாக்குக் கடிக்கும் நேரம் அக்காட்சியின் வியப்பில் ஈடுபட்டிருந்த பச்சை மெள்ளத் தலையை உசுப்பினான். அவன், வாயில்லாச் சீவனான அந்த அணிலையும் வாய் உள்ள ஜீவனான சன்னாசியையும் மாறி மாறி—மாற்றி மாற்றி நோக்கினான். அர்த்தபுஷ்டியுடன் நோக்கினான். பேச ஆரம்பித்தான்:

''அதானுங்க ஆயிரத்திலே ஓர் அதிசயம்! அந்த ஒட்டு மாம்பழத்தைக் கண்டீங்களாங்காட்டி? அதை வேறொரு அணில் கடிச்சுக் குதறி எச்சில் பண்ணியிருக்குது. அதாலேதான் இந்த அணிலு அந்தப் பழத்தை ஏறெடுத்தும் பார்க்கலே!.... இது கணக்கிலே அல்லா அணிலுமா இருக்குது? இல்லேங்கிறேன்!... வாய் பேசத் தெரியாத சீவன்களுக்குள்ளாறவும் எம்புட்டோ ஒசத்தியான குணங்க மண்டிக் கிடக்குது! சிலதுக்கும் எச்சிலுக்கும் ஏழாம் பொருத்தம்! சிலது பரிசுத்தத்துக்குப் பேர் போனதுக!... சில மிருகங்க, பட்சிசாதிகளுக்குள்ள ஜோடி சேர்ந்தாக்க, அதுகளிலே ஒண்ணு செத்துப் பூட்டா, இன்னொண்ணு அப்பவே தானும் மடிஞ்சிருமாம். மனுச சாதிக்குள்ளாற, ஒருத்தனுக்கு ஒருத்தியின்னு கட்டுத் திட்டப்படி இதுங்களுக்குள்ளவும் உண்டாம்! அந்நியம் அசலைக் கண்ணெடுத்தும் பார்க்காதாம்! நாம மனுசங்க – ஆறறிவு படைச்ச ஒசந்த சென்மங்கதான். ரத்தத் திமிரிலே எந்தச் சட்டத்தையும் புட்டெறிஞ்சுப்பிட்டு, காலித்தனமாய் நடக்கிறோம். சாமியின்னு ஒண்ணு இருக்குதுங்கிற நடப்பையே பண மமதையிலே மறந்துப் பூட்டு, என்னென்னமோ அநியாயம், நினைச் செய்யிறோம். ஊம்....! செய்யிற எந்த ஏடாகூடத்துக்கும் தப்புத் தண்டாவுக்கும் நாம ஆண்டவன் முன்னாடி எப்பவோ ஒரு நாளைக்குப் பதில் சொல்லியாக வேணுமிங்கிற விதியையே மறந்துப்புடுறோம்!.... ஊம் !....''

ஆற்றாமையின் வேதனைத் தேக்கத்தோடு பேசி நிறுத்தினான் பச்சைமுத்து.

விருந்தாளி சன்னாசியின் முகம் ஏன் அப்படிப் பேய் அறைபட்டதொப்ப வெளுத்துக் களை தாங்கிப் போய்விட்டது ?

''அயித்தை மவனே! ஒரு முசல் கெடைக்குமா? எம் மச்சான்கிட்டே ரொம்பநாளாய்ப் படிக்கப் படிக்கச் சொல்லிப் பார்த்துப்பூட்டேன். ஆம்பளை மசியலே!....'' என்று பச்சை முத்துவின் சம்சாரம் அஞ்சலை அந்தச் சன்னாசியிடம் முறையிட்டாள்.

''அதுக்கென்ன, இன்னம் ஒரு செழுமையக் குள்ளாற ரெண்டு மூணு முயலைப் பிடிச்சாந்து உங்காலடியிலே போட்டுப்புடறேன், அம்மான் மவளே அஞ்சலே!'' என்றான் சன்னாசி. சொல்லி விட்டுப் பெருமையுடன் பச்சை முத்துவைப் பார்த்த போது, அவன்









CBP.G.7 TAM

---




TAMIL






**பயோ-ஸால்**
**(கிரைப் மிக்சர்)**

**ஜே. & ஜே. டிஷேன்**
ஹைதராபாத் - இந்தியா

---



Loma
REGO




Loma
HAIR POMADE

முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்த வேதனைக் காட்சியைக் கண்டான். அந்தி சாயப் புறப்பட்டு விட்டான்.

வந்திருந்த விருந்தாளி சன்னாசியின் தலை மறைந்ததும் மறைந்திருந்த பச்சையின் ஆத்திரம் பீறிட்டது. ''ஏலே, ஒனக்குத் துப்பு கெட்டு இருக்கா?.... ஒரு அந்நியம் அசலுக்கு முன்னாடி என்னைக் கையாலாகாதவன்னு பேச நாக்குக்கு ஒனக்கு சாவிலே பித்தா, இல்லே எதும்பிலே பித்தாய்ப்பிறேன்? ஒனக்கு அந்த ஆளு அயித்தை மவனா இருக்கலாம். எனக்கு அவன் அசலாந்தானே? இந்த ஒரு நாயம்கூடவா ஒம் மர மண்டைக்கு ஏறலே?'' என்று வெஞ்சினம் வெடிக்கக் கேட்டு, அந்தக் கூட்டோடு அஞ்சலையின் முதுகில் நாலு அடி அடித்து விட்டான் பச்சைமுத்து.

அவள் விம்மினாள். ஆனால், இராச் சாப்பாட்டு வேளை வந்ததும், அவளைச் சமாதானப் படுத்தும் கடமை அவன் தலை மேல் விழுந்து தொலைத்தது. திருமணமான இந்தப் பன்னிரண்டு மாதங்களிலே நாலைந்து இருப்பம் இப்படித்தான் அவர்களுக்குள் ஊடல் நிகழ்ச்சிகள் கண்டாயின. அடித்த கையே அணைத்தது !..

ஒற்றையடிப் பாதையில் நடந்தான் பச்சை. 'இந்தப் பிள்ளைங்க பேச்சாலே மாடு மேய்க்கக்கிட்டுப் போயிருக்காங்களே? ஒருவேளை, அஞ்சலை இவங்க கண்ணிலே தட்டுப் பட்டிருக்குமோ!' என்று ஓர் ஆவல் ஓடியது. மறு இமைப்பில், 'கொண்டவனுக்கு அடங்காம போனா டாட்டி ஓடிப் பூட்டாளே' யின்னு இந்த மாட்டுக்காரப் பொடிசுக என்னை எளக்காரம் செஞ்சாளென்னு ஆகிறதாம்? அப்பாலே நானு எம் மொகரக் கட்டைக்கு முக்காடுதானே போட்டுக்கிட வேண்டி வரும்!....' என்று குத்துக்கல்லாக அப்படியே நின்றான்.

முதலில் அஞ்சலையை அவள் தாய் வீட்டுக்குப் போய்த் தேடுவது என்று நிர்மானித்தான். மறுகணம், 'போன கழுதை புத்தி தெளிஞ்சு தன்னாலே வரட்டுமே?.... கெஞ்சக் கெஞ்சத்தானே அதுக்குக் கொழுப்பு ஏறிப்பூடிச்சு ! நான் இன்னைக்கு முழுவதும் குலைப்பட்டினியாய்க் கிடந்தாத்தான், என் மனசுக்கும் ஆறுதல்படும் !... வரட்டும், வரட்டும் !. . அதுக்கு ஒரு புத்தி படிக்கக் கொடுத்தா சிலாக்கியம். மாப்புவிடப் புடாது இனிமே!.... ஆமா !' என்று ஒரே முனைப்பாக வைராக்கியம் கொள்ளலானான், பச்சைமுத்து.

வீடு நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தவனை வழிமறித்தான் வேம்பங்குடிச் சேக்காளி ஒருவன். ''அண்ணாச்சியோ ! ஒங்க வீட்டுப் பொம்பளையை எங்க வனக்காட்



டியிலே அந்தக் காவாலிப் பய சன்னாசி ஜட்டியிலே கண்டேனே காலம்பற!'' என்று திரியைக் கொளுத்திப் பச்சையின் தலையில் வீசிப் போட்டுவிட்டுப் பறந்துவிட்டான் !

தம்பிக்கோட்டை வீச்சரிவாள், பச்சை முத்துவின் இடுப்பில் கள்ளத்தனமாக விழித்துக் கொண்டிருந்தது. அனல் பிழம் பாகச் சுட்டுப் பொசுக்கி வறுத்துக் கொட்டிய வெய்யிலைப் பொருட்படுத்தாமல் அவன் வழி நடந்து கொண்டிருந்தான். ''ஊம்....! வரட்டும்! முந்தானை விரிச்சுப் போட்ட புருசனை மதிக்காம ஜட்டைவுட்டுக் காலடி எடுத்து வைக்க மனசொப்பின அந்தப் பாளத்த பாவி அஞ்சலையைப் பனங்காய் சீவுறதாட்டம் முதல்லே சீவிப் போடணும். அப்புறமா, அந்தக் காவாலிப் பய சன்னாசியை ஒரே வெட்டாய் வெட்டிப் போடணும். கடோசியா, மானம் பறி போன எம்புட்டுத் தலையை இதே வீச்சரிவாளாலே சாந்திப்புட வேணும்!.... அட பாவி மகனே சன்னாசி ! ஒன் எச்சில் புத்திக்கு விடிமோட்சமே கிடையாதாங் காட்டி?.... அஞ்சலைப் புள்ளையைச் சொக்குப் பொடி தூவி மயக்கத்தான் தேத்தைக்கு விருந்துக்கு வந்து, முசல் குட்டிப் புடுச்சுத் தாரதாய் வீராப்புப் பேசினியா ? தூ!'' அவன் மனம் அழுது புலம்பியது; சினந்து கொதித்தது.விரக்தியுற்றுக் கூனிக் குறுகியது.

வழி தொடர்ந்தது.

விதியும் தொடர்ந்ததோ ?

பச்சை விரக்தியுடன் சிரிப்பை வழித்துப் போட்டுவிட்டு, துவாலையைத் தலையில் வீசிப் போட்டவனாக நடந்தான். நடை தொடர்ந் தான்.

பத்திரகாளி கோயில் குறுக்கிட்டது.

பத்திரகாளியை அவன் எங்ஙனம் மறப் பான் ?

ஆத்தா சந்நிதானத்திலேதானே பச்சை யும் அஞ்சலையும் புருஷன் மனைவியாக ஆனார்கள் !

அழகி அஞ்சலைக்காகத் தவம் கிடந்தவன் அவள் முறை மச்சானான சன்னாசி. ஆனால் அஞ்சலையோ தன்னைக் காலிப் பயல் சன்னாசி யிடமிருந்து காக்கும்படி ஆத்தாளின் பாதங் களில் தவம் கிடந்தாள். 'கண்ட கண்ட பொண்ணுகளோட காலித்தனமாச் சுத்தி அலையிற சன்னாசிக்கு நான் வாழ்க்கைப் படவே மாட்டேன்!.... எனக்குப் பணம் வேண்டியதில்லே ! என் பசிக்குக் கஞ்சி ஊத்தத் தெரிஞ்ச நல்ல குணமுள்ள தங்க மான ஓர் ஏழை கெடைச்சாப் போதும்!'' என்று அவள் தன் விதவைத் தாயிடம் மன்றாடிக் கதறினாள்.

அந்நேரத்தில் பெண் பார்க்க வந்தான் பச்சைமுத்து. ''கட்டின பெண்டாட்டிக்கு எந்த விதத்திலேயும் வஞ்சனை செய்ய ஒப்பாத ஏழை நான். அதே மாதிரி நீயும் கொண்ட புருஷனுக்கு எப்பவும் துரோகம் செய்யாதவளாய் இருக்கோணும். நீ மன சொப்பினா, சொல்லு. இப்பவே பரிசம் போட்டுக்கிடுவோம்!'' என்று அஞ்சலையிடம் மனம் விட்டுப் பேசினான் பச்சை. அப்பேச்சு அவளது கன்னி மனத்தை நெகிழச் செய் தது. ''மச்சான், நானும் ஏழைதான். எனக் குப் பணம் பெரிசில்லே. ஒங்க நல்ல குணம் தானுக்கும் பெரிசு ! என்னை நம்புங்க. இது சாமி சத்தியமான பேச்சு !'' என்று உணர்ச்சி வசப்பட்டுப் பேசி, அவன் பேச்சுக்கு 'ஊம்' கொட்டினாள் அஞ்சலை.

அந்த அழகி அஞ்சலையா இப்போது அவனைச் செந்தேளாகக் கொட்டிவிட்டாள்?

கண்ணீரும் வேர்வையும் ஆறாகப் பெருகி வழிந்து கொண்டே இருந்தன !

அந்தச் சீமை ஓட்டுப் பெருமனை சன்னாசி யின் வீடு.

சன்னாசியின் தந்தையான கடலையாண்டி அம்பலம் அவனுக்கு வைத்து விட்டுப்போன வீடு அது. பெற்ற பிள்ளையை ஆண்டியாக்கி விடாமல், ரொக்கமாகவும் பதினையாயிரம் ரூபாய் வைத்து விட்டுப் போனார் அவர். செய்நேர்த்திக்குப் புஞ்சையில் நாலூறு குழித் தாக்கும் அற்புதமான ஊற்றுக்கேணி யும் அவனுக்கு மிஞ்சின. அவன் பார்வைக் குக் கிடந்த நஞ்சைத் துண்டுகளும் மிகுதி. அவன் தனிக்காட்டு ராஜா.

இப்போது, படிக்குப் பாதிகூடத் தேறுது. அவனுள் கனன்ற 'பெண் மோகம்' அவனைச் சாப்பிட்டு ஏப்பம் விடாமல் இருந்ததே அவன் செய்த புண்ணியம்தான் ! சன்னாசி அவன்......! நல்ல பெயர் !

கொலை வெறி துள்ள, காட்டுப் புலிப் பாய்ச்சலாகச் சன்னாசியின் வாசல் நிடலை மிதித்த பச்சைமுத்து தன்னை மறந்த ஆங்காரத்தோடு இடுப்பில் செருகி வைத் திருந்த வீச்சரிவாளை வலக் கையில் ஏந்திய வண்ணம் முன்னேறிச் சட்டி நடை போட் டான்.

அந்திவானத்தில் வித்தைமிகு கோலங்கள் பலுகக் கோலங்களை எழுதி ரசித்துக் கொண் டிருந்த ஆனந்தப் பொழுதல்லவா அது?

நடந்தான் பச்சைமுத்து.

ஒரு விளிம்பில் கெட்டி பாய்ந்திருந்த பாறுங்கல்லுக்கு ஊடே வளர்ந்திருந்த வேப்பங்கன்று தென்பட்டது. மலைப்புடன் கைந்நொடிப் பொழுது அந்த இயற்கையின் அதிசய விதியைப் பார்வையிட்டான். மறு கணம், அவனுள் பழைய கொலை வெறி பிறிட்டது.

வைக்கோல் போரின் மேல் சாய்ந்திருந்த பெண் உருவைக் கண்டதுதான் தாமதம், பச்சைமுத்துவின் இரத்தம் கொதித்தது. முகத்தில் கொலை வெறி தாண்டவமாடியது. குதிகால் பாய்ச்சலில் ஓடினான்.

மருண்டு மருண்டு நின்றாள் அஞ்சலை. ''மச்சான்!'' என்று விம்மினாள். வீங்கிக் கிடந்தன கன்னங்கள்!

''அடி சண்டாளி!.... எங்கேடி உன் கள்ளப் புருசன் சன்னாசி ? முதல்லே அவனை இந்த வீச்சரிவாளுக்குப் பலியாக்கிப்புட்டு, ஒன்னையும் ஒரே சீவாச் சீவிப் போட்டாத் தான் எச்சில்பட்ட மானத்துக்கு ஒரு ஈடு கெடைக்கும்! சொல்லுடி!'' என்று வீறு பூண்டு பேயாக முழக்கம் பரப்பிய பச்சை முத்து, பித்துப் பிடித்தவனாகி சுற்றிச் சுழலப் பார்த்துவிட்டு, இரை தின்ன உக்கிரமான குரோதத்தோடு வெறி மூளத் துடிக்கும் ராஜாளியாக மனைவி அஞ்சலையை நோக்கி ஓங்கின வீச்சரிவாளுடன் நெருங்கினான்.

## வரவிருக்கும் உஷ்ண மாதங்களுக்கு

# பாடா குளுமைக் காலணிகள்

மென்மையான பாடா குளுமைக் காலணிகளை அணிந்து நடக்கையில் கோடைக்காலத்திற் கேற்றவை தாம் என்ற விசேஷ உணர்ச்சி பெறுவீர்கள். இவை உங்கள் பாதங்களைச் சுற்றிலும் குளிர்ச்சி உண்டாக்கி காற்றோட்டத்துடன் நடக்கும் போது இன்பமும் அளிக்கும். கோடை காலத்திற்கேற்றவைகளில் சில இதோ: பாடாவின் பிற காலணிகளைப் போல் சிறந்த பொருள்களால் செய்யப்பட்டு சிறந்த வகையில் பொருத்தம், சிறப்பான வேலைப்பாடு, நீடித்த உழைப்பு ஆகியவற்றை இக் காலணிகளில் தனியாகக் காணலாம். இன்றே வந்து ஒரு ஜோடி வாங்கி அணிந்து வரவிருக்கின்ற உஷ்ண மாதங்களில் குளிர்ந்த உள்ளத்துடன் குளுமையான உணர்ச்சி பெற்றிடுங்கள்!

---

**Bata**

பாப்லு 5.25

ரீனு 6.50

இந்திரா 9.95

பீரோஷ் 11.50

சதன் 11.50

அடுத்த மின்வெட்டும் பொழுதில், என்ன கூத்து நடந்துவிட்டது !....

எட்டிக் கிடந்த கல்வல் குழியை எடுத்த அஞ்சலை அதைத் தன் கணவனின் மண்டையை நோக்கிஓங்கினாள். ''அடபாவி!... கொண்ட நாள் தொட்டு நீயே சாமியின்னு இருக்கிற உம் பொஞ்சாதியையா நீ சந்தேகப்பட்டே?.... ஓம் புத்தி பேதலிச்சுப் பூடுச்சா, என்ன? கண்டபடி ஏசுறியே, ஒன்நாக்கு அழுகிப்பூடாதா .......? ஐயோ, சாமியோ !'' என்று விருடன் கதறினாள்.

ஓங்கிய குழி சும்மாவா இருக்கும்?

பச்சை முத்துவின் மண்டையினின்றும் ரத்தம் கொப்புளித்துச் சீறியது.

ஓங்கிய சொற்களும் சும்மா இருந்துவிடவில்லே.

பற்களை 'நற நற'வென்று கடித்துக் கொண்டு, அஞ்சலையை நோக்கி விச்சரிவாளை ஓங்கிக் கொண்டு அவளை அண்டிய அவள் புருஷன் பச்சைமுத்து, ஏன் அப்படியே பகவானே, சிலையாகிவிட்டான்?....

''ஏன் மலைச்சுப் போயி நின்னிட்டே ? விச்சரிவாளை வீசு எம் மேலே! ம்.... ஏன் வீசல்லே ? இப்ப என்னத்தைப் புதுசாக் கண்டுபுட்டே எங்கிட்டே?....'' என்று நைந்த தொனியில் தேம்பிய அஞ்சலை தன் பூங்கரங்களை முகத்தில் பதித்து ஓலமிட்ட போது, 'ஆ' என்று தனக்குத் தானே அடித்தாள். பிறகு, தன் மச்சானை நோக்கினாள். ''எம்புட்டுக் கன்னம் ஒண்டிலேயும் இருக்கிற தழும்புகளா ஒன்னை மலைச்சுத் திகைக்கச் செஞ்சுது?.... ம்....! இதுக என்னோட அயித்தை மவன் சன்னாசி எனக்குத் தந்த சீதனம்!.... ஏனின்னு ஒனக்கு மட்டுப் படுதா?..... ம்..... நீ என்னை அடிச்சுப் போட்ட ஆத்திரம் எம் மனசிலே நீறுபூத்த நணலாய் முடங்கிக் கிடக்க, அந்த ஆத்திரத்திலே நான் வசங்கெட்டு நடந்துகிட்டிருந்தேன். அப்போ ரேக்ளாவிலே வேகமாகப் பாஞ்சு வந்து என்னைக் குறுக்கே மறிச்ச எங்க அயித்தை மவன் என்னைக் குடைஞ்சு குடைஞ்சு விசாரிச்சாங்க. நானும் நடப்பைச் சொன்னேன். அவுக என்னை நம்ம ஊட்டுக்குப் போயிடுண்ணு ரொம்பக் கெஞ்சிக் கூத்தாடினுக !.... நானு முடியாதுன்னு அடம் புடிச்சேன்......! தூக்குப் போட்டுக் கொண்டு சாகப் போறேன்னு பொருமினேன் ! உடனே அந்த ஆம்பளே என் மேலே கோவப்பட்டுச் சீறி, 'அடிச்சாலும் புடிச்சாலும் கொண்டவன்தான் எப்பவும் சதம்'னு சொல்லிச் சொல்லி அறைஞ்சாங்க!.... எங்கண்ணிலே நீர் வத்திப் போன சமயத்துக்கு நீ வந்து நின்னே!.... ஆனுக்க, எங்க அயித்தை புள்ளே கண்ணிலே மட்டும் கண்ணீர் இன்னும் வத்தலே ! மச்சான்.... மச்சான்....! ஒன்னையே மனந்துணிஞ்சு அடிச்சுப்புட்ட இந்தப் புத்தி கெட்ட அஞ்சலையை — ஒம்புட்டு ராசாத்திக் குட்டி அஞ்சலைப் பொண்ணை நீ சமிக்க மாட்டியா?'' என்று விம்மிப் பொருமினாள் அஞ்சலை. பச்சையின் மண்டைவெளியில் ரத்தம் கட்டி உறைந்துவிட்டிருந்த உதிரப் பிசிறுகளை அவள் கைநடுங்கத் துடைத்தாள்.

நம்பிக்கையுடன் கொண்டவனையே இமைக்காமல் பார்த்தாள். விழிவெள்ளம் பெருக்கெடுத்தது. அவளது விங்கிக் கிடந்த கன்னங்களை வருடி விட்டான்.

மஞ்சள் பற்று போட்டிருந்த கைவிரல்களுடன், கண்ணீரும் கம்பலையுமாகக் கட்டிலில் குறிகெட்டுச் சாய்ந்துகிடந்தான் சன்னாசி. அரவம் கேட்டு விசை பாய்ச்சி மெதுவாக எழுந்தான். ''யாரு, பச்சையா? என்னைச் சமிச்சுப்புடுங்க ரேன்.....பச்சை!'' என்று நாத் தழுதழுக்கக் கெஞ்சினான் சன்னாசி.

பச்சை அன்பு குழுலச் சிரித்தான். ''ஒங்களையா நான் சமிக்க? அப்பிடிச் சொன்னுக்க, சாமிக்கு அடுக்காதுங்க, சன்னாசி!.... தப்புக் கணக்குப் போட்டுக்கிட்டு வந்த கொலே பாவி நான்! நீங்கதான் என்னைப் பொறுத்துக்கிட வேணுமாக்கும்! தருமம் ஒங்ககிட்டவும் தேங்கி நிலைச்சு இருந்ததாலேதான் ஒங்க கடமையை ஒம்மாலே செஞ்சு காட்ட வாய்ச்சுது.....!'' குரல் கம்மக் கூறினான் பச்சை.

''உங்க அம்மான் மவளுக்கு மூணு முசல் வேட்டையாடிக் கொண்டாந்திட்டேன்!''

சன்னாசி ஆனந்தமாகப் புன்னகை காட்டினான். ''போடு, சவாசுன்னும்!''

அஞ்சலை கண்கலங்க முறுவல் ஏந்தினாள். ''பொல்லாத முசலுங்க! என்னமாய்க் கதையை மாத்தி வேடிக்கை காட்டிப் பிடிச்சுதுக!'' என்றாள் அவள். அவள் பார்வை இப்போது தன் நேச மச்சான் பக்கம் சாய்ந்தது. ''மச்சான் ! எங்க அயித்தை மவன்காரகளோட கைவிரல்கள் சாடாவும் இப்பிடி உத்தரமாய் விங்கிப் பூட்டதாலேதான், அவுகளாலே நகர முடியல்லே. இல்லாங்காட்டி, எப்பவோ என்னை அழைச்சாந்து ஒங்கிட்டே ஒப்படைச்சிருப்பாகளே அவுக!''

அஞ்சலையின் விழிச் சொட்டுக்கள், சன்னாசியின் கைவிரல்களில் அப்பப்பட்டிருந்த மஞ்சள் பூச்சில் வழிந்து சிதறின.



## உயிரோடிருந்தால்...

மகாத்மா காந்தியைச் சுட்ட கோட்ஸேக்கு என்ன தண்டனை அளிப்பது என்பது பற்றி நாடு முழுதிலுமே சர்ச்சையாக இருந்தது.

அப்பொழுது ஸ்ரீமதி அம்ருதகௌர், கவர்னர் ஜெனரலாக இருந்த ராஜாஜியைச் சந்தித்து, ''மகாத்மாஜி உயிரோடிருந்தால் என்ன செய்திருப்பார்?'' என்று கேட்டாள்.

''இந்தப் பிரச்னையே எழும்பியிராதே!'' என்றார் ராஜாஜி.




- விறுவிறுப்பான தொடர்
- நவரச விருந்து
- வரலாற்று விளக்கம்
- ஆபாச நடனங்கள்

இந்த இதழ் கல்கி, சிறுகதைச் சிறப்பிதழாக, அழகான நீண்ட அட்டைப்படத்தோடு வந்தது கண்டு எல்லையற்ற மகிழ்ச்சி கொண்டேன்.

ஒன்பது சிறப்புச் சிறுகதைகளும் வெகு அழகாக எழுதப்பட்டிருக்கின்றன. "பெரியம்மா என்ன வேண்டினாள்?" என்ற ஆர். சூடாமணியின் கதையும், "நாம் செய்த பாவம்" என்ற பொன்னித்துறைவனின் கதையும் கருத்திலும், கற்பனை ஆழத்திலும் எழுத்தின் நடையிலும் மிக மிகச் சிறப்பு பெற்று விளங்குகின்றன. கோமகளின் 'இனிக்கும் நினைவுகள்' முதல் அத்தியாயமே விறுவிறுப்பாக இருக்கிறது. இவரின் முதல் தொடர்கதை முயற்சிக்கு "கல்கி" ஆதரவு கொடுத்ததை எவ்வளவு பாராட்டினாலும் போதாது.

கொடுமுடி
15–4–68 — ந. சேதுராமன்

அப்பப்பா! என்ன இப்படித் திண்டாட வைத்து விட்டீர்கள்! சிறப்புச் சிறுகதை மலரைப் படித்ததும், சிறப்புக் கதைகளுக்குள் ஒரு சிறப்பான கதையைத் தேர்ந்தெடுக்க விரும்பினேன். 'கல்கி' வந்து இன்றோடு ஐந்து நாட்களாயிற்று. ஆனால் என்ன இது? எல்லாக் கதைகளுமே மிளிர்கின்றனவே!

மதுரை – 3
16–4–68 — லட்சுமி கண்ணன்

"பாதுஷாவின் பாதுகை"யை உருவாக்கித் தந்த சோதரர் திரு கோவி. மணிசேகரனையும், "நாம் செய்த பாவம்" என்கிற சிறுகதையை அமைத்துள்ள சோதரர் திரு பொன்னித்துறைவனையும் எவ்வாறு பாராட்டுவது என்று தெரியவில்லை. சிந்தனைப் பெரும் சிற்பியாகத் திகழும் இவ்விரு செம்மல்களுக்கும் நேரிடையாக வாழ்த்துரையளிக்க முகவரிகள் அறியாத காரணத்தால், இவை தோன்றியுள்ள பொன்னேடுகளை அளித்துள்ள கல்கி ஆசிரியரிடமே ஒரு வரியில் தெரிவித்துக் கொள்கிறேன். எனது வாழ்த்துக்கள்.

கும்பகோணம்
18–4–68 — துரோணன்

சிறுகதைகள் ஒவ்வொன்றும் உள்ளத்தைத் தொட்டன. ஆனால் திரு கோவி. மணிசேகரன் தந்த "பாதுஷாவின் பாதுகை" மிகவும் அற்புதம்!

16–4–68 — வெ. பொ. சுந்தரன்

கல்கி புத்தாண்டு மலரில் பிரசுரமாகியுள்ள "நவரத்தினக் கதைகள்" உள்ளபடியே மிகச் சிறந்த இலக்கியப் படைப்புகளாகும். நவரச விருந்து என்று சொல்லலாம். கோவி. மணிசேகரன் அவர்களின் கதையில் வீரம் கம்பீர நடை போடுகிறது.

தவறான வரலாற்று அம்சத்தை மறந்துவிட்டுக் கதையைப் படித்தால் மணியான கதைதான்.

தஞ்சாவூர்
13–4–68 — ரா. சுப்பையா எம். ஏ.

இதுபற்றி அச் சிறுகதையின் ஆசிரியர் திரு கோவி. மணிசேகரன் எழுதுகிறார்:

ஔரங்கசீப் தமிழகத்துக்கு வந்தானா? அவன் வரவில்லை என்பதற்கு ஆதாரம் எப்படிக் குழம்பிக் கிடக்கிறதோ, அப்படித்தான் வந்தான் என்பதற்கும். மிக்க மூர்க்கனான அவனிடம் எப்படியும் ஒரு நல்ல எண்ணம் குடிகொண்டிருக்க வேண்டும். அதுவே என் கற்பனை.

முதல் பாதுகை அனுப்பி வைத்தான் என்பது சரித்திரம். இரண்டாம் பாதுகையோடு அவன் வந்ததாக எழுதியுள்ளது என் கற்பனை.

சென்னை–2
16–4–68 — கோவி. மணிசேகரன்

"ஆலைக் கண்ணனைக் கண்டேன்
கதை அமைப்பைக் கண்டேன்
அதைக் கண்டதால் உள்ளத்தில்
அனங்கின் நிலையும் கண்டேன்"

கோவில்பட்டி
12–4–68 — உ. இராமநாதன்

கோவையில் சில நாட்களாக நடந்து வரும் பொருட்காட்சியில் 'இசைத் தட்டு நடனம்' என்று தனி மேடை அமைத்து, உயர்ந்த தனிக் கட்டணம் வசூலித்து, சில இளம் பெண்களை மிகவும் கேவலமான குறைந்த ஆடையில் பல இளம் உள்ளங்களைக் கெடுக்கும் விதத்தில் நடனமாடச் செய்கின்றனர். இது போன்ற ஆபாச நடனங்களுக்குத் தடை விதிக்கலாகாதா?

கோவை
16–4–68 — கார்த்திகேயன்

'ஏற்றுக்கொள்ளுங்கள் நேருஜி' நல்லதொரு இந்தியக் கதை. தமிழிலே வந்தால் தமிழ்க் கதை. தெலுங்கிலே வந்தால் தெலுங்குக் கதை என்றுதான் பெரும்பாலான கதைகள் வருகின்றன. அவற்றிலே மொழி எல்லையை மீறி 'இந்தியக் கதை'யாகத் தகுதி பெறக் கூடியவை சிலதான்.

சென்னை–28
18–4–68 — தம்பி சீனிவாசன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam





அவர்கள் தோற்றத்திலே
ஒற்றுமையில்லை, ஆனால்
அவர்கள் அனைவரும்
உபயோகிப்பது
பரிபூரண ஒப்பனைச்
சாதனமான

க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்



இழைவான மென்மை வாய்ந்த
க்ருக்ஸ் லாக்டோ-காலமைன் எத்தகைய
குறைபாடடையும் ஒளித்துவிடும்
பரிபூரணஒப்பனைச் சாதனம்.
நாள்தோறும் சருமத்தின்மீது தடவுங்கள்
லாக்டோ-காலமைன. இதமான
ஆற்றும் குணமுள்ள காலமைன்,
செறிவூட்டும் செயல் திறனுள்ள
விட்ச் ஹேஸல் இரண்டும் இணைந்து
உங்கள் சருமத்திற்கு எழிலூட்டும்.

க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்

மாசில்லா அழகுக்கு!
மேலும் உங்களுக்கு உரிய அழகு
சாதனங்கள் லாக்டோ-காலமைன்
டால்கம் பவுடர் மற்றும் க்ரீம்.




களவிட முடியாத க்ருக்ஸ் ஸீலும்,
க்ருக்ஸ் சின்னமும் இருக்கிறதா
என்று கவனித்து வாங்குங்கள்.
க்ருக்ஸ் இண்டர்ப்ரான் லிமிடெட், பம்பாய்-25.

OL. 73 TH

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி